ப்ரஸ்தாவித்ததாகக் கொண்டு சகுந்தலே எங்கே? என்று கேட்டதாக அமைப்பு உள்ளது. இங்கு 'சகுந்தலாவண்யம்' என்று சொல்லாமல் "விஹங்கம லாவண்யம்" என்றோ 'பக்ஷி லாவண்யம்' என்றோ சொல்லியிருந்தால் அப்போது குழந்தை 'என் தாய் எங்கே?' என்று கேட்பதற்கு ப்ரஸக்தி யுண்டோ? இது கவி தானுக வைத்த வொரு சமத்காரம். அப்படி ஏதேனும் இங்கு விசித்ரவாக்கின் அமைப்பு உள்ளதோ? ருஜுவான வாக்கேயுள்ளது. "ஸர்வத்ராபி பூர்ண ஏவ" என்று ஸாதித்த ஸ்வாமியின் திருவுள்ளத்தில் "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் கதம் பவேத்?" என்று சங்கிப்பதற்கு உறுப்பான அர்த்தமே உறைந்து கிடந்ததென்பது அசைக்க முடியாதபடி தேறிவிட்டது. அந்த பூர்ணத்வந்தான் வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தி யென்பது. கடைசியாக இவ்விஷயத்தை முடிக்குமளவிலும் வேருெரு சப்தத்தையிட்டு முடிக்காமல் "யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவான்" என்று முதல் முதலிலெடுத்த பூர்ண சப்தத்தையே யிட்டு முடித்தார், இவ்விடத்தில் "க்ருத்ஸ்நப்ரஸக்திரித்யாதி பூர்வபக்ஷ ஸூத்ரத்தையும் "ச்ருதேஸ்து சப்தமூலத்வாத்" என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தையும் எடுத்துக் காட்டி இதைத் தஞ்சமாகக் கொண்டன்றோ விவாத விஷயம் உபஸம்ஹரிக்கப்பட்டது. பிறர் சொல்லுகிறபடி ஸ்வாமிக்குத் திருவுள்ளமாயிருந்தால் இங்கு இந்த ஸூத்ரத்தை உதாஹரித்தது ஸர்வாத்மநா அப்ரஸக்தமாகுமே. லோக விஸஜாதீயமான அத்புத சக்திவாய்ந்த பரம புருஷனிடத்திலே 'இது எப்படி ஸம்பவிக்கும்? அது எப்படி ஸம்பவிக்கும்?' என்று வாயைத் திறவாதே என்றன்றோ ஸூத்ரகாரர் முடித்திட்டது. அது தானே இங்கு ஸ்வாமியின் முடிவுக்குக் கைகொடுத்தது. அகடிதகடநாசக்தன் பக்கலிலே கூடாததொன்றில்லை யென்று கூறிவைத்தவர் தாமே ரஹஸ்யத்ரயஸாரத்தில். இந்த சக்திக்குக் கண்ணழிவு கூற நேர்ந்ததென்ருல், இந்தப் பொற்றலேயடைக்க மூவுலகும் திரண்டாலும் செய்யலாவதில்லேயே. கைதேர்ந்த ஆயிரம் மருத்துவர்கள் ஒன்று கூடித் திரண்டுருண்டு வந்தாலும் உயிரிழந்து போனவற்றுக்கு உயிர்ப்பிச்சை யளிக்க முடியுமா வென்பதையும் உணரகில்லாரந்தோ நவீனமேதாவிகள்.

28. "மலிநமபி ஹிமாம்சோர் லக்ஷ்ம லக்ஷ்மீம் தநோதி" என்ற மஹாகவி தானே "ஏகோ ஹி தோஷோ குணஸந்நிபாதே நிமஜ்ஜதி இந்தோ: கிரணேஷ்விவாங்க:" என்றது என்னே? "லக்ஷ்மீம் தநோதிக்கும் நிமஜ்ஜதிக்கும் சேர்த்தியில்லேயே யென்று கேட்டால் இதற்கு ஒரு படி மறுமாற்ற முரைத்து மெழுகலாம். இங்கு அப்படியில்லேயே.

29. ச்ருதப்ரகாசிகாசார்யர் தெளிவித்த தெளிவை இனி நன்கு விளக்குவோம். உபநிஷத்து "ய ஆத்மநி திஷ்டந்" என்ற வளவோடு நில்லாமல் ஆத்மந: அந்தர:" என்றும் ஓதிற்று. இது அவசியமோ! ☆ஆத்மநி திஷ்டன்☆ என்றவளவே போராதோ? என்று சங்கை தோன்றக்கூடியது. இதற்கு ஜிஜ்ஞாஸாதிகரண ச்ருதப்ரகாசிகையில் ☆வேத்யாமக்நிஸ் திஷ்டதி, திலே தைலம் திஷ்டதி☆ என்ற இரண்டு வாக்கியங்களே யெடுத்துக் காட்டித் தெளிவு பெறுத்தியிருப்பது காண்க. 'எள்ளில் எண்ணெய் இருக்கிறது' என்ருல் எண்ணெயானது எள்ளினுள்ளே யிருப்பது சொல்லிற்ருகுமே யல்லது வெளியிலுமிருப்பதாகச் சொல்லிற்ருகாது. 'திண்ணே யில் தீ இருக்கிறது' என்ருல் தீ திண்ணேயின்மேலிருப்பது சொல்லிற்ருகுமே யல்லது உள்ளிலுமிருப்பதாகச் சொல்லிற்ருகாது. ஆத்மநி பரமாத்மந: ஸ்திதியோ

வென்னில் உள்ளும் புறம்பு மொக்கவாயிற்று; திலத்தில் தைலமிருப்பது போலவும் வ்யாப்தி; வேதியில் அக்நியிருப்பது போலவும் வ்யாப்தி; இப்படிப்பட்ட விலக்ஷண வ்யாப்தியை விளங்கக் காட்டுவதற்கே ச்ருதி "ஆந்தரநி நிஷ்டந், ஆத்மந: அந்தர:" என்று இரண்டு படியாகவும் ஓதிற்று—என்று ச்ருதப்ரகாசிகையில் விவரணமுள்ளது. ஆக அணு வஸ்துவில் அந்தர் வ்யாப்தி விஷயம் நிஷ்கல்மஷமாய் முடிவு பெற்றது.

30. இனி பரிஸமாப்ய வர்த்தித்வத்தைப்பற்றி ச்ருதப்ரகாசிகாசார்ய ருடைய திருவுள்ளத்தை இங்குச் சுருங்க உபபாதிக்கிறோம். இதற்கு அவதாரிகை யாகச் சில வார்த்தைகள் அவசியமாகின்றன. நவீநர்களின் சுவடியில், ஜயந்த பட்டன்—பார்த்தஸாரதி மிச்ரர்—சாலிகநாதன் என்கிற பெயர்களை மகுடமாக வைத்துச் சில சில வரிகள் வரையப்பட்டுள்ளன. இந்த பரிச்ரமம் எதற்காகக் கொள்ளப்பட்டதென்பதைச் சிறிது விவரிக்கிறோம். இது மிக முக்யமான விஷயம். "ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே எல்லாவற்றிலும் தனித் தனியே குறைவற வியாபித்து நிற்கும்" என்றும், "ஜாதி வ்யக்திதோறும் பரிஸ மாப்ய வர்த்திக்கிறதென்றால் அசேதநத்துக்கு இது கூடுமென்றிருப்பர்கள்; பரம சேதநனுய் ஸர்வ சக்தியானவன் இங்ஙனே வர்த்திக்கிறனென்றால் இதில் விப்ரதி பத்தி பண்ணிப் போருவர்கள்" என்றும் ஈட்டில் அருளிச் செய்தவற்றை நாம் எடுத்துக்காட்ட நேர்ந்தபோது நவீநர்கள் "நாம் ஜாதியை ஒப்புக் கொள்ளாதவர் களாகையாலே ஜாதியை த்ருஷ்டாந்தீகரித்து இவ்விஷயத்தைச் சொல்லுவதே தகுதியற்றது" என்றார்கள். அதன்மேல் நாம் "யதா ஜாதிவாதிநோ ஜாதிரேகைவ அமூர்த்தா கண்டமுண்டாதிஷு அத்யந்தவிலக்ஷணேஷு அநந்தேஷ்வபி பரிஸ மாப்யைவ வர்த்ததே, ந தத்ர இதரவஸ்து சோத்யமிதி" என்றுள்ள வேதாந்த தீப ஸூக்தியை யெடுத்துக் காட்டினேம். அதன்பிறகு திகைத்து நின்றவர்களிவர்கள். இந்த ஸ்ரீஸூக்தியானது இவர்களுடைய குசோத்யங்களை யெல்லாம் வேரறுக்குமது. இருக்கட்டும். இந்த ஸ்ரீஸூக்தியை நாமெடுத்துக்காட்டியான பிறகு தாங்களும் அதை உதாஹரிக்கத் தொடங்கினார்கள். "பகவத் ராமாநுஜன் தீபக்ரந்தத்தில் ஸ்பஷ்டமாக ஸாதித்தார்" என்று அசட்டுத்தனம் நன்கு விளங்க எழுதினார்கள். வர்ஷஸஹஸ்ரம் போராடினாலும் இந்த ஸ்ரீஸூக்தி இவர்களுக்கு காலகூடமே யென்பது அசைக்க முடியாதது.

31. சோத்யம் பண்ண வாயைத் திறவாதே என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கச் செய்தேயும் "ஒரு வ்யக்தியினுள்ளே பரிஸமாப்ய வர்த்தித்தால் அந்யத்ர வ்யாப்தி எப்படி கூடும்." என்று இந்த ஆக்ஷேபமொன்று தானே இவர்களிடம் தாண்டவ மாடுகிறது. இந்த ஆக்ஷேபத்தைச் செய்யாமல் அர்த்த பரிஷ்காரத்தை எங்ஙனே செய்தாலும் அழகியதே யென்று நாமும் பல பல கால் அறைகின்றோம். தைவதுர் விபாகாத் இந்த ஆக்ஷேபத்தை மறைத்திட முடியவில்லை யிவர்களுக்கு. எதைச் சொல்லி உய்வோமென்று தடுமாறுகின்றார்கள். ஜாதியைப்பற்றிப் பிறர் என்ன சொல்லுகிறார்களென்று பார்க்கிறார்கள். எதைப்பார்த்தாலும் இவர்களுக்கு அநர்த்தமாகவேயுள்ளது. அதையும் தாங்களே வெளியிட்டுக் கொள்ளுகிறார்களே, இதுவும் ஒரு விதிபோலும். ஜயந்த பட்டன் என்ற தலைப்பின் கீழ் இவர்கள் எழுதி

யுள்ள விஷயம் இவர்களுக்கு என்ன உபகாரகமோ அறியோம், ''ஜாதியைப் பரிஸமாப்யவர்த்தி யென்கிறீரே, ஒரு வ்யக்தியிலேயே முடிந்து நிற்பதையன்றோ பரிஸமாப்யவர்த்தி யென்பது; மற்றும் பலபல வ்யக்திகளிலு மிருக்கிறவிதனை ஒரு வ்யக்தியில் பரிஸமாப்யவர்த்தியாக எப்படிச் சொல்லுகிறீர்?'' என்று கேட்பவர்களுக்கு ஜயந்த பட்டாசார் என்ன மறு மொழி கூறுகின்றார்? அவர் சொல்லுவதிவ்வளவே; 'என்னைக் கேட்டால் நானென்ன சொல்வது? பரிஸமாப்யவர்த்தி யென்று சொல்லித் தீரவேண்டியதாயிருக்கிறது; அது மற்ற வ்யக்திகளிலும் காணப்படுகிறதே யென்கிறாயோ? ஆமாம், காணப்படுகிறது. அதை இல்லை செய்ய யாரால் முடியும்? அதையும் இசையவேண்டியதே, இதையும் இசையவேண்டியதே' என்று.

32. இவ்விதமாகவே - இதைவிட அதிகமாகவே பகவான் விஷயத்தில் பேசவேண்டியிருக்க, இந்த நவீநர்கள் என்ன பேசுகிறார்களென்பதை விவேகிகள் நோக்கவேண்டும். ப்ரஹ்ம ஸ்வரூபம் ஒன்றில் பரிஸமாப்யவர்த்தித்தால் மற்றொன்றில் அது காணமுடியாதென்றே இன்னமுங்கூறுகிற இவர்களின் பிடிவாதம் ஊமனுர் கண்ட கனவிலும் பழுதாயொழிந்ததென்று முடியவில்லையா? பகவானை ஸ்பர்சியாத அவர்களின் பேச்சு ஒரு புறமிருக்க, ப்ரஹ்மவாதிகளில் தலைவரான ச்ருத்ப்ராகாசிகாசார்யருடைய ஸ்ரீ ஸூக்தியன்றோ நமக்குத் தலைமேலது.

33. வேதார்த்த ஸங்க்ரஹவிவரணத்தில் *ஏகஸ்மிந்நேவ வஸ்துநி ஸ்வரூபஸ்ய பூர்ண வ்ருத்திதயா அந்யத்ர வ்ருத்த்யயோக்யத்வசங்காவ்யுதாஸார்த்த: என்றுள்ள ஸ்ரீ ஸூக்தியானது இவர்கள் கூறும் அல்பமான ஆக்ஷேபத்தைப் பலயோஜனை தூரத்தளவில் கொண்டு தள்ளவில்லையா? ''ஏகஸ்மிந்நேவ வஸ்துநி ஸ்வரூபஸ்ய பூர்ணவ்ருத்திதயா'' என்ற வாக்யமானது பரப்ரஹ்ம ஸ்வரூபம் வஸ்துதோறும் பூர்ணவ்ருத்தி யென்று திடப்படுத்திற்று. அடுத்ததான *அந்யத்ர வ்ருத்தி - அயோக்யத்வசங்கா வ்யுதாஸ:* என்றதானது பஹிர்வ்யாப்திக்கு விருத்தமாமென்று வாயெடுக்கவுமாகாதென்று கெட்டியான பூட்டு போட்டு விட்டது. இந்த மருமம் இவர்களது நெஞ்சிற்படாமலில்லை; பட்டும் பயனில்லையே. 'சட்டி சுட்டது, கை விட்டது' என்று விட்டுத் தொலைக்க விதியில்லையே. ''இந்த ஸூக்திக்கு அது திருவுள்ளம், அந்த ஸூக்திக்கு இது திருவுள்ளம்'' என்று தம் மனத்துக்கும் பொருள்படாத வகையில் மெழுகிக்கொண்டு போகிறார்கள். உபநிஷத் பாஷ்யகாரரான ரங்கராமாநுஜ ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தியை நாமெடுத்துக் காட்டினோம்; இவர்களைத் தெளிவிக்க அதைவிட வேறொரு ஸ்ரீஸூக்தி வேணுமா? அதையும் இவர்கள் தங்களுக்கு அநுகூலமென்று காட்ட 'அதைக் காண்க' என்கிறார்கள்.

34. கலியாண முஹூர்த்தத்திற்கு நாளிட்டுத் தரும்படி ஒரு யதாஜாதன் ஒரு புரோஹிதரிடம் வேண்டிக் கொண்டான்; அவர் ஏதோவொரு பஞ்சாங்கத்தைத் தவறுகப் பார்த்து 'பங்குனிமீ 14உ நல்ல நாள்' என்று தெரிவித்தார். அந்த யதாஜாதன் அப்படியே குறிப்பிட்டு உற்றுருறவினர்க்கு சுப பத்திரிகை அனுப்பி விட்டான். ஒருவர் கவனித்துப் பார்த்ததில் அந்நாள் க்ருத்திகையும் அமாவாஸ்யையும் சனிக்கிழமையும் மரணயோகமுங் கூடியிருந்தது. உடனே ஓடிவந்து 'இதென்ன, இப்படி விபரீதமான நாளை யார் உமக்கு இட்டுக் கொடுத்தது? என்று

கேட்க, அவன் உண்மையில் திதிவாரநக்ஷத்ர நன்மை தீமைகள் ஒன்றுமறியாதவனுகையாலே புரோஹிதரிடம் வந்து 'தாங்களிட்டுக் கொடுத்த நாள் நல்லதன்று' என்கிருர்களே யென்ருன். உடனே புரோஹிதர் பஞ்சாங்கமெடுத்துப் பார்த்தவாறே முன்பு தாம் பார்த்தது வேருெரு வருஷத்தியதென்றும் அநவதாநாத் தவறிப்போய் விட்டதென்றும் உண்மை தெரிந்துகொண்டார்; ஆனாலும் தமது அசட்டுத்தனத்தை ஒப்புக்கொள்ள மனமில்லாமல் ஒரு சூது செய்யத் தொடங்கினர்; "நல்ல நாளன்று என்று உன்னிடம் சொன்னவரை இங்கு அழைத்துவா; நான் எது கேட்டாலும் அவர் ஆமாம் ஆமாம் என்றே ஒப்புக்கொள்ளும்படி செய்துவிடுகிறேன் பார்" என்று சொல்லிப் போகவிட்டார். உடனே அவரை யழைத்துக்கொண்டு வந்தானவன். அவரை நோக்கிப் புரோஹிதர் கேட்கிருர்;—(வினு) பங்குனிமீ 14வ. அமாவாஸ்யை தானே? (விடை) ஆமாம். (வினு) அன்று கிருத்திகை தானே? (விடை) ஆமாம்; (வினு) அன்று சனிக்கிழமைதானே? (விடை) ஆமாம், (வினு) அன்று மரணயோகந்தானே? (விடை) ஆமாம். (வினு) நான் கேட்டால் எதையும் ஆமாம் ஆமாம் என்கிறீர்; இவனிடம் போய் அல்ல அல்ல என்கிறீராமே, ஏன்? இதற்குமேல் அவர்க்கு ஒன்றும் பதில் சொல்லத் தோன்றவில்லை. நம்மால் இவர்க்கு பதில் சொல்லிப் பிழைக்க முடியாதென்று சிக்கெனவெண்ணி ஒன்றும் சொல்லாமல் போய்விட்டாரென்று ஸ்ரீமத்தேரழுந்தூராண்டவன் ஒரு கதை ஸாதிப்பது கேட்டதுண்டு. அதுதான் இங்கு ஞாபகத்திற்கு வருகிறது. "உங்களுக்குக் கால கூடமான பிரமாணங்காணுமிது" என்று நாம் எந்த ப்ரமாணங்களைக் காட்டுகிருேமோ அவற்றைப்பற்றி இவர்கள் ஆராய்ந்து விவரிக்கவேண்டியிருக்க அதைவிட்டு அதை தங்களுக்கு அனுகூலம் போலவே பாவனை காட்டி "அவற்றைக்காண்க" "அதைக் கவனிக்கவேண்டியது" "அதை உற்று நோக்கவேண்டியது" என்று எழுதிவிட்டால் என்னுகும்? விவரித்த கதையில் புரோஹிதருடைய ஸ்தானத்தையே இவர்கள் ஆச்சரியமாக அலங்கரிப்பவர்களென்பதை எளிதாகக் கண்டறியவல்ல விவேகிகள் ஆங்காங்கு இல்லாமற் போகவில்லை.

35. நவீநர்களின் ஸர்வசக்திச் சுவடியில் தர்க்கம் என மகுடமிட்டு எழுதின விஷயம் ஸர்வாத்மநா அஸாதுவென்பது ஈண்டு நிரூபிக்கப்படுகிறது. தர்க்கமாவது யுக்திவாதம். சாஸ்த்ரங்களில் தேறின அர்த்தங்களை யுக்திவாதங்களாலும் ஸ்தாபிப்பது என்ருெரு முறையுண்டு. *ஆர்ஷம் தர்மோபதேசஞ் ச வேதசாஸ்த்ராவிரோதிநா, யஸ் தர்க்கேணுநுஸந்தத்தே ஸ தர்மம் வேத நேதர:* என்பது ப்ரஸித்தமாதலால் சாஸ்த்ரங்களோடு முரண்படாத யுக்திவாதங்களைக் கொண்டு சாஸ்த்ரார்த்தங்களை நிஷ்கர்ஷிப்பதென்பது நிரவத்யமானது. யுக்தி வாதங்களால் சாஸ்த்ரார்த்தங்களைத் தலை கீழாக்குவதென்பது கிடையாது. ப்ரக்ருத விஷயத்தில் தர்க்கத்தை உபஷ்டம்பகமாகக் கொள்ள வேணுமானுல் "பகவான் ப்ரதிவஸ்து பூர்ணன்" என்பதற்கு ஸாதகமான வழியில் கொண்டு அதை ஸ்தாபிக்கலாமேயல்லது வேறுசெய்யத்தகாது. பிறர் செய்வது என்னவென்ருல், ப்ரதிவஸ்து பூர்ணத்வத்தை அபலாபம் செய்வதற்கு யுக்திவாதத்தை உபஷ்டம்பகமாகக் கொள்ளப் பார்க்கிருர்கள். இவர்களுடைய யுக்திவாதம் எதுவென்ருல், "ஒரு வஸ்துவிலேயே பகவான் பூர்ணன் என்று கொண்டால் மற்ருெரு வஸ்துவில் வியா

பிக்க ப்ரஸக்தியில்லையே'' என்பதுதான். வேறு ஒரு சரக்கும் இவர்கள் கையில் கிடையாதென்பது சிலாலிகிதம். இந்த யுக்தி வாதத்தைக்கொண்டு பகவச்சக்தியை இல்லை செய்வதானால், இதுபோன்றனவும் இதைவிட மேம்பட்டனவுமான யுக்தி வாதங்களினால் எல்லா சாஸ்த்ரார்த்தங்களையும் எளிதாக நிரஸித்துவிடலாமே. பகவானொருவனுளன் என்று வைத்துக்கொண்டன்றோ நாம் இங்ஙனே வ்யாப்தி யென்றும் வாத்ஸல்யமென்றும் தயையென்றும் ப்ரபத்தியென்றும் சில விஷயங் களைப் பற்றிக்கொண்டு போராடுகின்றோம். 'மூலே குடார:' என்று அந்த பகவானையே இல்லை செய்கிற யுக்திவாதிகள் இவ்வுலகில் மலிந்து கிடக்கிறார்களே; அவர்களது வாதங்களினால் பகவான் போய்விட்டானென்றா நாம் நினைக்கிறோம். *யதுக் தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்கள ஸூத்ரதாம்* என்னும்படி வேத மாதுக்குத் தாலி கட்டிவைத்த மஹாசார்யர் *இத்யாத்யநிஷ்டித குதர்க்கமதர்க்கயந்த: த்வத் வைபவம் ச்ருதிவிதோ விதுரப்ரதர்க்க்யம்* என்று அருளிச்செய்துவைக்கையாலே நாம் குறைவின்றி வாழ்கின்றோம். இங்குக் கழிக்கப்பட்ட அநிஷ்டித குதர்க்க வாதி கள் ஸ்ரீ பாஷ்யாதிகளால் நிரஸ்தரானவர்கள் மாத்திரமல்ல, ஸ்ரீ வசநபூஷணாதி களால் நிரஸ்தரானவர்களும் கூட அந்தவிருது சுமப்பவர்களே யென்று அறியத் தக்கது. நையாயிகர்கள் ஈச்வரனை அங்கீகரியா நின்றார்களெனினும் அவர்கள் அநுமானத்தைக்கொண்டு ஈச்வரனை ஸாதிக்கிறபடியால் அந்த ஆநுமாநிகேச்வர னும் பரம வைதிகர்களுக்கு ஹேயனாயினன். எந்தப்ரமாணங்கொண்டு ஸாதித்தா லென்ன? ஏதோவொருபடி ஈச்வரனை அங்கீகரித்தால் போதுமானதுதானேயென்று வைதிகர்கள் நினைப்பதில்லை. ஏன்? *தர்க்காப்ரதிஷ்டாநாத்* என்று ஸூத்ரகாரர் சொல்லிவைத்தாரே. இதில் இவ்வளவு போதும். ... ... (11.)

## — 12. வாத்ஸல்யார்த்த விவரணம் —

36. எம்பெருமானுடைய திருக்குணங்களை விவரித்தருளாநின்ற நம் பூருவா சாரியர்கள் ''வாத்ஸல்யமாவது தோஷங்களையும் போக்யமாகக் கொள்ளுகை'' என்று காட்டியருளினார்கள். சரணாகதிகத்யத்திற்கு மிகவும் ஸம்க்ஷேபமாக பாஷ்ய மிட்டருளின ச்ருத ப்ரகாசிகாபட்டர் வாத்ஸல்யம் நாம தோஷேஷு குணத்வ ''புத்தி:'' என்றருளிச் செய்தார். அவர் தாமே ஸ்ரீ பாஷ்ய ச்ருத ப்ரகாசிகையிலும் ஸம்பந்த விசேஷாந்விதேஷு ப்ரீதி: ஸ்நேஹ:; யஸ்ய விபாகா: அஸ்த்தாநபயசங் கித்வம், தோஷாநவபாஸ:, தோஷேபி குணத்வபுத்திரித்யாதய: என்றருளிச் செய்துள்ளார். இந்த வாக்யத்தில் *தோஷேபி குணத்வபுத்தி:* என்கிறது நோக் கத்தக்கது. *வாத்ஸல்யம் நாம தோஷேஷ்வபி குணத்வபுத்தி:* என்று ஸமந்வ யாதிகரண ச்ருத ப்ரகாசிகையிலுமுள்ளது.

37. உலகில் ப்ரீதியின் நிலைமைகள் பலவிதமாயிருக்கும். அச்சம் சங்கிப்ப தற்கு ஆஸ்பதமில்லாமலிருக்கச்செய்தேயும் என்ன ஆபத்து நேர்ந்துவிடுமோ வென்று வயிறுபிடிக்கும்படியாகப் பண்ணிவிடுவது ஒருவகையான ப்ரீதி நிலைமை, ஒருவனிடத்தில் குற்றங்கள் பலபல நிரம்பியிருக்கச்செய்தேயும் அவை புலப்படாத படியாவதும் ஒரு ப்ரீதி நிலைமை. அக்குற்றங்கள் புலப்படாதவளவேயன்றிக்கே அவற்றையே நற்றமாகக கொள்ளும்படியாவதும் ஒரு ப்ரீதி நிலைமை. இவ்வர்த்

த்தையே மேலெடுத்துக்காட்டிய ச்ருதப்ரகாசிகா ஸ்ரீஸூக்தியானது விளங்கக் காட்டுகின்றது.

38. தோஷங்களையும் போக்யமாகக் கொள்ளுவதென்னும் வார்த்தையைப் பிறர் ஹேயமாக நினைத்து ஹேளனம் செய்வதுமுண்டு. உலகத்திலும் ப்ரத்யக்ஷமான அநுபவத்திலுள்ள படிகளை அறியாமையினாலது. தோஷங்களை அருவருக்கவேண்டி யிருக்க அவற்றை குணமாகக் கொண்டு போக்யமாகக் கொள்ளும் நிலைமை ப்ரேமத்தினுடைய மிகச் சிறந்த எல்லை நிலமான பருவமாகும். ஒருவனுக்கு ஒருவ னிடத்தில் எல்லை கடந்த ப்ரீதி சென்றதென்றால் அவனது குற்றங்களை யெல்லாம் நற்றமாகக் கொள்வதற்கு மேற்பட வேறொன்றுமாகாது. இது லோகஸித்தமான விஷயம். *யதா ஸத்ய: ப்ரஸூதாயா தேநோர் வத்ஸே* என்று ஒரு திருஷ்டாந்த மும் காட்டி யருளுகிறார் ச்ருதப்ரகாசிகாசார்யர். "எற்றே! தன் கன்றினுடம்பின் வழுவன்றோ காதலிப்பது, அன்றதனை யீன்றுகந்த ஆ" என்பது ஞானஸாரத்தில் அருளாளப்பெருமாளெம்பெருமானார் அருளிச்செய்த பாசுரம். அன்றீன்ற கன்றின் பக்கல் தாய்ப் பசுவானது எவ்வகையான ப்ரேமம் கொண்டிருக்கின்றதென்பது அபரோக்ஷம். கன்றினுடம்பிலுள்ள வழுக்களை யெல்லாம் பரம போக்யமாகக் கொண்டு நக்குகின்றது பசு. இப்படிப்பட்டவொரு ப்ரேமவிசேஷமே வாத்ஸல்ய சப்தார்த்தம்.

39. இவ்விஷயத்தில் பிறருடைய சங்கை யென்னவென்றால், தோஷத்தில் தோஷத்வமென்கிற தன்மை எப்போதும் தோற்றிக்கொண்டே யிருக்க, தோஷத் தைக்கண்டு குணமென்று க்ரஹிப்பது எம்பெருமானுடைய ஞான பூர்த்திக்குக் கொத்தையன்றோ என்பதாம்.

40. இங்குத் தெளிவிக்கின்றோம். ஸஹஸ்ரநாமத்தில் * அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சு: * என்றுள்ளது ப்ரஸித்தமே. அவிஜ்ஞாதா என்பதற்கு அறியாதவன் என்று பொருள். ஸஹஸ்ராம்சு: என்பதற்கு ஸர்வதோமுகமான ஞானத்தையுடைய வன் என்று பொருள். இவ்விரண்டு திருநாமங்களும் ஒன்றோடொன்று சேராதவை. ஸஹஸ்ராம்சுவாக இருப்பவன் அவிஜ்ஞாதாவாக இருக்கமுடியாது. அவிஜ்ஞா தாவாக இருப்பவன் ஸஹஸ்ராம்சுவாக இருக்க முடியாது. ஆனாலும் இரண்டு திரு நாமங்களும் சேர்ந்திருக்கின்றன. அவிஜ்ஞாதா என்பதற்கு 'அடியார்களின் தோஷங் களைக் காணாதவன்' என்று பொருள் கூறப்படுகின்றது. இப் பொருளில் ஸர்வஜ்ஞத் வம் பங்கமடைந்துதானே தீரும். இதற்குப் பிறர் செய்யும் பரிஹாரம் ஏதென்று பார்க்கவேணும். உண்மையில் எம்பெருமானுக்கு ஸர்வஜ்ஞத்வம் குறையற்றிருக்க வும் ப்ரேமவசத்தினால் அடியார்களின் குற்றங்களைக் காணாக் கண்ணிட்டிருப்பதென் பது பொருந்தும். அதுவொரு ப்ரேமபருவம். குற்றங்களை நற்றமாகக் கொள்ளுவ தென்பது அதற்கு மேற்பட்ட ப்ரேமபருவம். இதைத்தான் ச்ருதப்ரகாசிகாசார்யர் நன்கு காட்டியருளியுள்ளார்.

41. நம் தோஷங்கள் எம்பெருமானுக்கு போக்ய மென்றால், போக்ய வஸ்துக்களை ஸமர்ப்பிக்க நாம் மேன்மேலும் ஆசைப்படுவதுபோல தோஷங்களையும் மேன்மேலும் நாம் செய்ய ஆசைப்படவேண்டி வந்துவிடாதோவென்பது

பிறருடைய முக்கியமான ஆக்ஷேபம். அவர்கள் கவனிக்கவேண்டும். எம்பெருமானை தோஷாதர்சி [அதாவது, தோஷங்களைக் காணுதவன்] என்று தெரிந்துகொண்டாலும், தோஷங்களை க்ஷமிப்பவன் என்று தெரிந்துகொண்டாலுங்கூட கீழ்க்கூறிய ஆக்ஷேபம் இடம்பெற்றே நிற்குமன்றோ. நாம் என்ன குற்றம் செய்தாலும் எம்பெருமான் அதைப்பாரான் என்றும், பார்த்தாலும் பொறுத்துக்கொள்வன் என்றும் நாம் க்ரஹிக்கலாமென்று இசைகிறுர்களன்றோ பூர்வபக்ஷிகள். இங்ஙனே இசையும்போது, நாம் குற்றங்களைக் கூசாமல் அஞ்சாமல் செய்யவேண்டிவாராதோ? இதை நன்ருக ஊன்றி நோக்கவேணும்.

"எம்பெருமான் எப்போதும் தண்டதரனாய் நிக்ரஹத்திலேயே ஊற்ற
முற்றிருப்பனேயல்லது அவன் பொறுமைக்குண முடையவனல்லன்"

என்று க்ரஹித்தாலன்றி அவரவர்கள் பாப பீருக்களாயிருக்க முடியாது. க்ஷமிப்பவன் என்று அறிந்துவிட்டால் பாபஞ் செய்யத் தயங்கவேண்டியதில்லையன்றோ. ஆகவே எம்பெருமானை தோஷ போக்யனுகக் கொண்டால் எந்த ஆபத்து வருமென்று ஆக்ஷேபம் செய்யப்படுகின்றதோ அந்த ஆபத்து எம்பெருமானை தோஷாதர்சியென்றும் க்ஷமாசீலனென்றும் கொள்ளுமவர்களின் பக்ஷத்திலும் அபரிஹார்யமென்று அறியக் கடவது.

42. வஸ்துத: ஒரு ஆபத்துக்கும் இடமில்லாமே உண்மை யுணர்த்துகிறோம். எம்பெருமானுக்குப் பலவகைப்பட்ட குணங்கள் உள்ளன. அவற்றுள் எந்த குணம் எந்த ஸமயத்தில் எந்த வ்யக்தியின்மீது எந்தவிதமாக ப்ரஸரிக்குமென்று நிலையிடவல்லார் ஆருமில்லை. அப்பெருமானது 'க்ஷமாகுணத்திற்கோ வாத்ஸல்ய குணத்திற்கோ நாமே யிலக்கு' என்கிற நிச்சய வுணர்ச்சி நமக்குத் திடமாக இருக்குமாகில் தோஷங்களை நாம் கூசாது செய்ய நேருமென்கிற தூஷணம் இடம் பெறும். *கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்றருளிச் செய்கிற எம்பெருமான் படியை யறிந்து வைத்து ஆஸ்திகனொருவன் புத்தி பூர்வகமாகக் குற்றஞ் செய்யத் துணியக் கூடுமோ? நெருப்பு தாஹகத்வ சக்தியுடையது என்று ஒருவன் சிந்தித்த மாத்திரத்திலே அவன் வீடு பற்றி யெரிந்ததாய்விடுமோ? சர்க்கரை மிகவும் தித்திக்குமென்று சொன்னவளவிலேயே நாக்கு தித்திக்குமோ? அதுபோல், வாத்ஸல்யமாவது தோஷ போக்யத்வமென்று குண ஸ்வரூபத்தைப் பேசுமளவால், நம் தோஷங்களெல்லாம் பகவானுக்கு போக்யமாய்விடுமென்றுவது, அவனுக்கு போக்யமான தோஷங்களை நாம் செய்துவிடலாமென்றுவது நினைக்க நேருமோ? ஒருகாலும் நேராது. அவன் திருவுள்ளம் எந்த வ்யக்தியினிடத்தில், எந்த க்ஷணத்தில் எவ்விதமாகப் பெருகுமோ, அதை யார் அறியவல்லார்? யாரும் அறியகில்லார், அப்பெருமான் தானும் முன்னம் அறியகில்லான்.

43. அளவு கடந்த அன்புக்கு இலக்கானுருடைய தோஷங்களை போக்யமாகக் கொள்ளு மியல்வு அவனிடமுள்ளதென்றும், அதுதான் வாத்ஸல்யமென்றும் நிஷ்கர்ஷிப்பது அநவத்யம். நம் தகப்பனுர் நம்மிடத்தில் பரம ப்ரீதி வாய்ந்தவர். நாம் தெரிந்தும் தெரியாமலும் குற்றங்களைச் செய்து போருகிறோம். அக்குற்றங்களுக்காகப் பிதா தண்டிக்கிருரென்பது கிடக்க, சில வேளைகளில் குற்றங்களை மன்னித்த

தாகச் சொல்லுகிறுர். சில வேளைகளில் குற்றங்களைக் காணுதது போலவே போய் விடுகிறுர். சில வேளைகளில் அக்குற்றங்களையும் நற்றமாகக் கொண்டு அணைத்து உச்சிமோந்து உகக்கிறுர். அதனுல் நாம் அச்சங்கெட்டு புத்திபூர்வமாகக் குற்றஞ் செய்யத் துணிவதில்லை. அதுபோலவே இங்குங் கொள்க.

44. இவ்விஷயத்தில் இவ்வள வெழுதுவதே போதுமானது. ஆயினும் இன்னமுஞ் சிறிது பன்னி யுரைக்க விரும்புகிறேம், இது மிக முக்கியமான விஷய மென்பது பற்றி.

45. எண்ணில் பல் குணங்கட்குக் கொள்கலமான எம்பெருமானிடத்தில் வாத்ஸல்ய மென்கிற விது மிகச் சிறந்த குணம். நம்மாழ்வார் திருவாய்மொழியில் *நிகரில்புகழ்* என்கிற சொல்லால் இக்குணத்தைக் குறிப்பிடுகிறுரென்று நம் ஆசாரியர்கள் வியாக்கியானஞ் செய்தருளுகிறுர்கள். அங்ஙனம் நிகரற்றதாக ப்ரஸித்தமான இக்குணத்தை ஸாமாந்ய குணமாக்கிவிடப் பார்க்கிறுர்கள் பிறர். தோஷங்களைப் பாராமையே வாத்ஸல்யமென்கின்ற அவர்கள், ரஸமயமான பொருளை அறியப் பெருததோடு ஸித்தாந்தப் பொருளைப் பழிக்கவும் இழிக்கவும் தலைப்பட்டார்கள். "தென்னுசார்யர்கள் கேசவனை தோஷ போக்யனுகக் கூறி நிந்திக்கிறுர்கள்" என்றும், "நாம் குற்றஞ் செய்தால் எம்பெருமான் தண்டிப்பனே யென்று அஞ்சவேண்டி யிருக்க அவனை தோஷ போக்யனுகக் கூறி அவனுக்கு க்ஷீராந்நம் ஸமர்ப்பிக்கும் ஸ்தானத்தில் தோஷங்களையே மிக மிகச் செய்து அவனை உகப்பிக்கப் பார்க்கிற தென்னுசார்யர்களுக்குப் பாபஞ் செய்வதிலேயே முழு நோக்கு" என்றும் இங்ஙனே பலவாறு பேசியு மேசியும் போருகின்றுர் பிறர்.

46. ஸித்தாந்திகளில் சிலர் இதுவொரு சிறிய விஷயந்தானே; நிர்வாஹ பேதம் போலும்; இது எப்படியிருந்தாலென்ன? என்று இதில் உபேக்ஷயாயிருப்பா ருளர். வஸ்துதஸ்து, வாத்ஸல்யம், தயை என்கிற இரண்டு குணங்களில் பிறர் செய்யும் வாதவிவாதங்களை நிரஸித்து உண்மைப்பொருளை ஸ்தாபிப்பதொன்றே முக்கியமான ஸித்தாந்த ஸ்தாபந கைங்கரியமாகும் என்பதே பெரியார்களின் துணிபு. இதில் இவ்வளவு ஊற்றம் எதனுலென்னில்; கேண்மின்.

47. நிர்குண ப்ரஹ்மவாதிகளான குத்ருஷ்டிகளைக் கண்டித்து எம்பெருமானை அநந்தகல்யாணகுணகண மஹோததியாக ஸ்தாபிப்பதே எம்பெருமானுர் தர்சனத்தின் மிகச்சீரிய நோக்கு. ஆனது பற்றியே ஆழ்வாரும் திருவாய்மொழி தொடங்கும்போதே * உயர்வறவுயர் நலமுடையவன் * என்றுர். "நிர்க்குண ப்ரஹ்மவாதிகளின் மிடற்றைப் பிடித்தாப்போலே இப்படி அருளிச் செய்வதே" என்று கூரத்தாழ்வான் முதலானேர் உள் குழைந்துருகினுர்கள். பகவத் குணங்கள் உயர்வறவுயர்ந்திருக்கையாவது என்ன எனின்; அதை *அநவதிகாதிசய* என்கிற வடசொல்லால் ஆசார்ய ஸார்வபௌமர்கள் விவரித்தருளினுர்கள். அதாவது நம் போன்ற மநுஷ்யர்களிற் காணுங்குணம் ஒரு அளவில் நிற்பதென்றும், எம்பெருமானிடத்தில் அங்ஙனன்றிக்கே ஒவ்வொரு குணமும் எவ்வளவு ஓங்கி யிருக்கலாமோ அவ்வளவும் ஓங்கியிருப்பதென்றும் சொன்னபடி.

48. வாத்ஸல்ய குணமும் தயாகுணமும் நம்போன்றவர்களிடத்திலுள்ள அளவுகூட எம்பெருமானிடத்தில் இல்லையென்று வாதிக்கின்றவர்கள், அப்பெருமானைக் கல்யாண குணக்கடலாக இசைந்து பயனென் கொல்?

49. ஸாமான்யமாக மநுஷ்யகுணங்களை முன்னம் எடுத்துக்கொண்டு பேசுவோம். உபநிஷத்தும் *ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா பவதி......ஸ ஏகோ மாநுஷ ஆநந்த:* என்று மநுஷ்யாநந்தத்தை முதலிட்டுக்கொண்டே பரப்ரஹ்மாநந்தத்திற்குச் சென்றதாதலால் நாமும் மநுஷ்ய குணத்தை முதலிட்டுக்கொண்டு பகவத் குணத்திற்குச் செல்வோம்.

50. மநுஷ்ய குணத்தில் எது உயர்ந்தது என்று பார்த்தால், 1. குற்றங்களையும் நற்றமாகக் கொள்வதும், 2. பிறர் துயருறுவதைக்கண்டு ஐயோ வென்று தானும் துயருறுவதுமே உயர்ந்த குணமாக லோகாநுபவத்திலுள்ளது, நூல்களிலுமெழுதப்பட்டுள்ளது. இவ்விரண்டு குணங்களும் எம்பெருமான் பக்கலில் பொருந்த மாட்டாவென்று பிரபலமாக வாதிக்க எழுமவர்கள் அந்தோ! எம்பெருமானை குணசாலியென இசைந்தார்களாக வழி யில்லையே. * யதி பாஸ்கர யாதவப்ரகாசௌ நிகமாந்தஸ்திதி நிர்ணயப்ரவீணௌ; அபரை: கிமிவாபராத்தமார்யை: அயதாபாஷண சாதுரீதுரீணை: * (2-93) என்று ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ஸ்வாமி ஸாதித்த ச்லோகமொன்றே அடிக்கடி நினைவுக்கு வாராநின்றது.

51. *யஸ்ய விபகா:......தோஷேபி குணத்வபுத்திர்த்யாதய:* என்று கீழே எடுத்துக் காட்டிய ச்ருதப்ரகாசிகா ஸூக்தி விளங்கும்போது ப்ரீதி பரீவாஹ ரூபமான தோஷ போக்யதாபுத்தி குணமன்றென்று சொல்லப்போகாது. குணமென்று தேறின விது மநுஷ்யர்களிடத்திற் காட்டில் எம்பெருமானிடத்தில் சதகுணாதிகமாக விளங்குகின்றதென்று இசைந்து தீரவேண்டும். உலகத்தில் குணமென்று பேர் பெற்றவற்றுள் ஒன்று தப்பாமல் எம்பெருமானிடத்து இருந்தேயாகவேண்டுதலால் இது எம்பெருமானுக்கு ஸம்பவியாதென்று வாதிக்குமவர்கள் திறத்தில் * ஜக்த்தஸ்ய காநநம்ருகை: ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோ விசேஷ: * என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியே அநுஸந்தேயமாக வடுக்கும்.

52. தோஷமென்பது இரண்டுவகை. செய்கைகளில் காணும் தவறுகள் ஒருவகையான தோஷம். *மாம்ஸாஸ்ருக்பூய விண்மூத்ர ஸ்நாயு மஜ்ஜாஸ்த்தி ஸங்குலமான அழுக்குடம்பில்* தீண்டாவழும்புஞ் செந்நீரும் சீயும் நரம்பும் செறிதசையும் வேண்டா நாற்றம்* என்னப்பட்டவை மற்றொருவகையான தோஷம். கடோபநிஷத்தில் [2-4-12] *அங்குஷ்டமாத்ர: புருஷோமத்ய ஆத்மநி திஷ்டதி; ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே* என்றுள்ள ருக்கானது சரீர தோஷங்களும் எம்பெருமானுக்கு போக்யமாகின்றன வென்பதைக்காட்டி நின்றது. இவ்விடத்திற்கு பாஷ்யமுரையாநின்ற ரங்க ராமாநுஜஸ்வாமி "பூதபவ்யேச்வரத்வாதேவ வாத்ஸல்யாதிசயாத் தேஹகதாநபி தோஷாந் போக்யதயா பச்யதீத்யர்த்த:" என்றுரைத்தார். ஸ்ரீ தேசிகன் வரதராஜபஞ்சாசத்திலே "ஔதந்வதே மஹதி ஸத்மநி பாஸமாநே ச்லாக்யே ச திவ்யஸதநே தமஸ: பரஸ்மிந் அந்தர்கலேபரமிதம் ஸுஷிரம் ஸுஸூக்ஷ்மம் ஜாதம் கரீச! கதமாதரணாஸ்பதம் தே:"

[பரமபதம் முதலிய சிறந்த ஸ்தானங்களை யெல்லாம் இகழ்ந்திட்டுப் பரமஹேய மான பாபியேனுடலை போக்யமாகக்கொண்டு வர்த்திக்கிறாயே] என்றார். இப்படிப் பட்ட தோஷ போக்யத்வமே வாத்ஸல்ய மென்று இந்த ச்லோகத்தின் வியாக்கியா னத்திலும் பெரியார் வரைந்தார். இந்த தோஷ போக்யத்வத்தை *மங்கவொட் டுன்மாமாயை* என்கிற பாட்டிலே ஆழ்வாரும் விளங்கவுரைத்தருளினர். மிகமிக அருவருக்கத்தக்கதான தேஹ தோஷங்களே போக்யமாகிறதென்று உபநிஷதாதி ஸித்தமாம்போது, செய்கைத் தவறுகளான தோஷங்கள் ப்ரீதியின் கனத்தால் போக்யமாகின்றனவென்னும் விஷயத்தில் விப்ரதிபத்தி ஸர்வாத்மநா அப்ரஸக்தம்.

53. ஸஹஸ்ரநாமத்தில் வத்ஸலநாமத்திற்கு பாஷ்யமருளிச் செய்யாநின்ற பட்டர் பகவத்குண தர்ப்பணத்திலே *ஸ ஹி சிரம் பரிசீயமாநேஷ்வபி சரணுக தேஷு கஸ்யாபி ஹேதோ: ஸத்ய: ப்ரஸூதேஷ்விவ வத்ஸேஷு ஸஹுங்காரா: ஸபயஸ் ஸம்ஸ்நவஸ்தநவேதநா: கிங்கர்தவ்யதாகுலா தேநவ இவ ஸம்ப்ராம்யதி* என்றருளிச்செய்தார். அறிவுடையார் இப்படியெல்லாம் அநுபவித்துப் பேசும் பகவத் குணத்திற்குக் கண்ணழிவு சொல்லுமதிற் காட்டிலும் நிர்க்குண ப்ரஹ்ம வாதமே நன்றாகும்.

54. எம்பெருமானுக்கு தோஷா தர்சித்வம் [அதாவது அடியார்களின் குற்றங்களைக் காணுமை] என்னுங் குணம் இல்லையென்பது ஸித்தாந்திகளின் வாத மன்று. அதுவும் ப்ரீதியின் ஒரு பருவமாதலால் அதனை இல்லைசெய்வாரில்லை. அதுவும் ஒரு புடை. அதற்கு மேற்பட்டதான தோஷ போக்யதா ரூபமான ப்ரீதியை இல்லைசெய்யலாகா தென்பதே தத்துவம்.

55. தோஷங்களை போக்யமாகக் கொள்வதென்றால் என்ன? என்னில், குணங்களைக் கண்டு எவ்விதமான சித்தவ்ருத்தி எம்பெருமானுக்கு விளையுமோ, அவ்விதமான சித்தவ்ருத்தியே தோஷங்களைக் கண்டும் விளையுமென்றபடி. இதைத் தான் ச்ருதப்ரகாசிகா ஸ்ரீ ஸூக்தி காட்டாநின்றது. குணங்களைக் கண்டு விளையும் ப்ரீதி தோஷங்களைக் கண்டு விளையுமோ? என்கிற ஆக்ஷேபமே பிறர்பால் தலையெடுத் திருக்கும். இதற்குரிய ஸமாதானங்களைக் கீழே விரிய வுரைத்திட்டோம். இன்னமும் இவ்விஷயத்தை மிக வெளியமுறையில் விவரிக்கிறோம்.

56. கூரத்தாழ்வான் *யத் ப்ரஹ்மகல்பநியுதாநுபவேபி அநாச்யம் தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே* என்றருளிச்செய்கிறார்; அனேகமாயிரம் ப்ரஹ்ம கல்பங் களில் அனுபவித்தாலும் தொலைய மாட்டாத தீவினைகளை நாம் அரைநொடிப் பொழுதில் அவலீலையாகச் செய்து போருகின்றோ மென்பது மேற்குறித்த ச்லோகத் தின் கருத்து. இப்படிப்பட்ட நம்மைக் காத்தருளக் கடமைப்பட்ட எம்பெருமான் பரம க்ருபாளுவேயாயினும் லோகநிர்வாஹார்த்தமாக தண்டதரனுயுமிருப்பதால் தனது திருவடிவாரத்தில் தலைசாய்க்குமவர்கள் விஷயத்தில் குற்றங் காரணமாக நிக்ரஹிக்க நேர்கின்றது. அப்போது பிராட்டி மாத்ருத்வப்ரயுக்தமான வாத்ஸல் யாதிசயத்தினுல் நம்மை அநுக்ரஹத்திற்கு இலக்காக்குவிக்கப் பலவகை யுபாயங் களைக் கொண்டு எம்பெருமானைத் தன் சொல்வழியொழுகுமவனாக்கக் கடமைப்

பட்டவள். அதனுல் எம்பெருமானை நோக்கி 'நாதா! குற்றங்களை அளவுகடந்து செய்திட்டும் உமது திருவடிவாரத்தில் தலைசாய்க்காமலே கிடக்குமவர்கள் விஷயத்தில் நீர் எவ்வளவும் நிக்ரஹத்தைக் காட்டவமையும்; அப்படி விமுகர்களாக வன்றிக்கே அபிமுகர்களாமவர்கள் எத்தனையேனும் தோஷபூயிஷ்டர்களாயிருந் தாலும் அவர்களை அருளுக்கு இலக்காக்கியே யாகவேணும்' என்று ஸதுபாயமாகக் கூறுவள்.

57. தன்னுடைய தண்டதரத்வமும் பழுதாகாமல் தயை முதலிய குணங்க ளும் பாழ்படாமல் அதிகாரி பேதேந எல்லாம் நிறம் பெறும்படி நல்லவுபாயமாகப் பிராட்டி இங்ஙனம் கூறியதைக் கேட்குமெம்பெருமான் சில வ்யக்திவிசேஷங்கள் பக்கலிலே தனது அருள் முதலிய குணங்களைப் பெருகவிட்டு குணக்கடலென்கிற திருநாமமும் தலையெடுக்கப் பெறுகின்ருன். [*புருஷகாரபலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம்'' என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியின் வியாக்கியானத்தில் இவ்விஷயம் வியக்தமாக வுணரத்தக்கது. அங்ஙனே தலையெடுக்கும் குணங்களுள் வாத்ஸல்யமென்பது ஒப்புயர்வற்றது. நெஞ்சை நீர்ப்பண்டமாக உருக்கவல்லது. இந்த குணத்தின் ஸ்வரூபம் இன்னபடிப் பட்டதென்று தெளியவுணர்த்தினுலுங்கூட இதில் சிலர் அநவரதம் ஆக்ஷேபங்களையே செய்து போருகிருர்கள். பூருவாசாரியர்களின் தெளிவான ஸ்ரீஸூக்திகளை அவர்கள் பாராதவர்களல்லர். பார்த்துவைத்தும், ஏதோ அபிநிவேசத்தினுல் சில ஆக்ஷேபங்களைச் செய்துகொண்டே யிருக்கின்றனர். குணுநுபவத்தில் ஊன்றினவர்களுக்கு அவ்வாக்ஷேபங்களில் காதுகொடுப்பதும் கண் செலுத்துவதும் அப்ராப்தமாதலால் அவற்றுக்கு மறுப்புரைக்க அவசியமில்லையாயி னும், மதுபானம் செய்யவேண்டும் போதைக்கு மக்ஷிகாநிரஸநமும் அவர்ஜநீய மென்ற கணக்கிலே, ப்ரமாண சரங்களாலே அந்த ஆக்ஷேபகர்களை விலக்கிவிட்டு பகவத் குணும்ருதாஸ்வாதனத்தில் இறங்க வேண்டியிருக்கிறது.

58. வாத்ஸல்யமாவது குற்றங்களையும் நற்றமாகக் கொள்ளுகை யென்று ச்ருதப்ரகாசிகா ஸ்ரீஸூக்தியிருப்பது கீழே பரக்க நிரூபிதம். இதனை அதிவாதமென் கிருர்கள் பிறர். இதை அப்படியேயிசைந்துகொண்டு சில சொல்லுகிருேம். நடாதூரம்மாள் பக்கலிலே கேட்ட அர்த்தங்களையே ஸ்ரீஸுதர்சநபட்டர் தமது க்ரந்தத்தில் ஏறியருளப் பண்ணிஞரென்றும் ஆனதுபற்றியே ச்ருதப்ரகாசிகை யென்ற திருநாமம் சாற்றிஞரென்று முள்ளது. இதனுல் எம்பெருமாஞர் முதலான முன் ஞேர்கள் மொழிந்தருளின பொருளையே ஸ்ரீஸுதர்சநபட்டர் அருளிச்செய்து வைத்தாரென்று தேறிற்று. இனி அந்தப்பூருவாசாரியர்களும் அதிவாதமாகவே சொல்லிப் போந்தார்களென்று சொல்ல வேண்டியதாயிற்று. அப்படி வ்யக்தமாக வும் எழுதியிருக்கின்ற இந்த மஹான்களை ஒன்று கேட்கிருேம். பூருவாசாரியர் களெல்லாருமே ஒரு மிடருக அதிவாதம் செய்கைக்கு என்ன காரணமென்று. இதற்கு நேரான விடையிறுக்க வேண்டுமிவர்கள் ஸ்தோத்ர பாஷ்யத்தில் ஸ்வாமி தேசிகன் *மஹதாமபி கேஷாஞ்சிததிவாதா: ப்ருதக்விதா:, தத்ததர்த்தப்ரசம்ஸாதி தத்பரத்வாதபாதிதா: என்று ஸாதித்திருப்பது ப்ரஸித்தம். அதனையடியொற்றியே விடையிறுத்தல் நன்று. அதிவாதம் செய்வதானது ப்ரசம்ஸைக்காகவே; அதாவது

பெருமைப்படுத்துவதற்காகவே என்று தேசிகன் திருவுள்ளம் பற்றுகிறார். அது பகவத் குணத்தில் சேருமானால் என்னகுறை? அதிவாதமென்று ஒதுக்கவேண்டிய அவசியமில்லையே. இப்படிப்பட்ட அதிவாதம் அவசியம் செய்யவேண்டியதன்றோ.

59. இதற்கு நவீநர்கள் ருஜுவான உத்தரமொன்று முரைக்ககில்லார்கள். எம்பெருமானுக்கொரு ப்ரசம்ஸை ஏற்படுவதானால் அதற்காக எவ்வளவு சொற்களைத் தொடுக்கவேணுமானாலும் கூசாமல் தாராளமாகத் தொடுக்கவேண்டியது தானே. இல்லாதவற்றை ஏறிட்டுச் சொல்லி ப்ரசம்ஸையை விளைப்பதென்பது எம்பெருமான் விஷயம் தவிர மற்ற விஷயங்களிலே யாகுமத்தனை. எம்பெருமான் விஷயத்திலோவென்னில், இல்லாததொன்றைச் சொல்லிப் பெருமைப்படுத்துவதென்பது பரமைகாந்தி வேதாந்திகள் இசையுமதன்று. இங்கு *அந்யத்ர அதந்குணேக்திர் பகவதி ந* இத்யாதியான பட்டர் ஸ்ரீஸூக்தி அநுஸந்தேயம். எம்பெருமான் விஷயத்தில் நாம் எவ்வளவோ மிகையாகச் சொல்லிவிட்டதாக நினைக்கும்படி அதிகமாகவே சில சொன்னோமானாலும் உண்மையில் அவனது குணக்கடலில் ஒரு சிறு திவலையளவே சொல்லிற்றாக ஆகுமத்தனையல்லது வேறில்லையே. *கோ மஜ்ஜதோரணுகுலாசலயோர் விசேஷ:* என்ற கணக்கிலே நாமும், நம்மிற்காட்டிலும் மேம்பட்ட பிரமன் சிவனிந்திரன் முதலானாரும் உயர்த்தியாக எத்தனை பேசினாலும் அப்பெருமானது குணஸாகரத்தில் அதுவொரு பிந்துமாத்ரமேயாமென்பதில் ஐயமுண்டோ? இப்படியிருக்க, ப்ரசம்ஸைக்காக அதிவாதம் செய்தபடி யென்று நவீநர் கூறுவதனால் அவர்களின் பக்ஷத்திற்கு என்ன அநுகூலமாயிற்றென்று பார்க்கவேணும். ப்ரசம்ஸையென்பது குணங்களின் பெருமையேயன்றோ. அதனால் அவத்யலேசமும் விளையப்போகிறதில்லையே. அவத்யம் விளைவதானால் அதற்குறுப்பான அதிவாதத்தை ஆசார்யர்கள் செய்யமாட்டார்களன்றோ. ஏதேனுமொருபடியாலே பகவத்குணங்களைப் போஷித்துக்கொண்டே போதுபோக்குவதுதான் நம்போல்வார்க்கு நித்ய கர்மாநுஷ்டானமாக இருக்கவேண்டுமென்று ஆசாரியர்கள் நியமித்திருக்க, அவ்வநுஷ்டானம் தைவாதீனமாக ஏதோ சிறிது வாய்த்ததானால் பகவத் குணங்களில் ஈடுபடவேண்டிய வகுப்பினர் இதில் ஆக்ஷேபங்களைச் செய்து பொறாமை காட்டத் தகுமா?

60. ச்ருதப்ரகாசிகா ஸ்ரீஸூக்தியை அதிவாத மென்னுமளவால் இவர்களின் மதத்திற்கு என்ன லாபமாயிற்றென்பதே இங்கு முக்கியமாக விமர்சிக்கவுரியது. அதை நாமே நன்கு விமர்சித்து மருமமுணர்த்துகிறோம். *தத்ததர்த்த ப்ரசம்ஸாதி.தத்பரத்வாத் அபாதிதா:* என்கிற தேசிக திவ்ய ஸூக்தியிலுள்ள ஹேதுவையும் ஸாத்யத்தையும் விவேகிகள் நன்றாக நோக்கவேணும். பக்தர்கள் அவசியம் செய்து தீரவேண்டியதும் மிகவும் உசிதமுமான குணப்ரசம்ஸைதானே அதிவாதத்தினால் விளைகின்றது. இப்படிப்பட்ட ப்ரசம்ஸைக்கு நாம் உகக்கவேண்டியிருக்க வெறுப்பது ஏனோ? இந்த ப்ரசம்ஸையில் உங்கட்கு மாச்சரியமுண்டானது எதனாலென்று கேட்கிறோம். இதற்கு விடையிறுத்தே தீரவேண்டும். 'இது அசாஸ்த்ரீயமான ப்ரசம்ஸை' என்று சொல்லுவதற்கோ இடமில்லை. அசாஸ்த்ரீயமாயிருந்தால் *அபாதிதா:* என்று ஸ்வாமி தேசிகன் ஸாதிக்கமாட்டாரன்றோ. இது சாஸ்த்ரீயமே யென்று தேறியுமிருக்கிறதே. இந்த ப்ரசம்ஸையின் பெருமை

உந்தமக்குத் தெரியவில்லையா? இது பக்தர்களை எவ்வளவோ உகப்பிக்குமது, பகவத் குணங்களிலேயே யீடுபட்டிருக்கும் மஹான்களின் உள்ளத்தை உருக்க வல்லது. ஸ்தோத்ர ப்ரியனான எம்பெருமானுடைய திருவுள்ளத்தையும் மகிழ் விக்குமது. வாய் படைத்தவர்களின் வாக்குக்குப் பெருமை பயக்குமது. பகவத் குணப் பெருமையைப் பொறாதாருடைய செருக்கையடக்குமது. ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவமே வடிவெடுத்ததென்னத் தக்கது. கொடிய வினைகளுக்கு வித்தான ஸம்ஸாரத்தையே அடியறுக்குமது. நிகரற்ற ஆனந்தக் கடல்கள் பல திரண்ட படியோ! என்னத்தக்கது. இப்படிப்பட்ட மிகச்சிறந்த குண ப்ரசம்ஸையை விளக்கவல்ல ஸ்ரீ ஸூக்திகளை அதிவாதமென்றால் இதனை ஸத்யாதிவாதமென் றன்றோ கொள்ளவேண்டும், இந்த அதிவாதோக்தியானது பிறருடைய [குத்ருஷ்டி களினுடைய] மதத்தைப்பாறு பாருக்குமதன்றோ. 'தோஷேபி குணவத்புத்தி:' என்பதைச் சிறந்த சாஸ்த்ரார்த்தமென்று ஸ்தாபிக்கவல்ல தன்றோ இந்த அதிவாதவாதம்.

61. சில மதஸ்தர்கள் நிர்குண ப்ரஹ்மவாதிகளாக வுள்ளார்கள். அவர்களை மறுப்பதாகக் கூறுமிவர்கள் அவர்களது திரளிலேயே புகுந்தார்களாகப் பெறுவது தகுதியோ? பகவத் குணப் பெருமையில் ஒரு ஆக்ஷேபம் செய்வதென்பது குணா நுரக்தர்களுக்குச் சேருமதன்றே. ஹேயமான குணத்தை ஏறிட்டுரைத்தால் ஆக்ஷே பியாமல் வேறு என்ன செய்வது என்கிறவாதமும் இடமற்றதே; தோஷேஷு குணத்வபுத்தி: என்பதனால் குணாதிசய ப்ரசம்ஸைதான் ஏற்படுகிறதென்று நன்கு இசைந்தான பின்பு ஹேய குணமென்று வாய்திறக்கவும் வழியில்லையே. எம்பெரு மான் பக்தர்களது குற்றங்களைக் குற்றமாகவே கொள்ளுகிறானா? அல்லது நற்றமாகக் கொள்ளுகிறானா? அல்லது காணாமலேயிருந்து விடுகிறானா? என்று ஒருவர் வினவினால் இதற்குத் திண்ணமான விடையிறுக்க ஒருவர்க்குமியலாது; ஏனென்றால், அவனது திருவுள்ளத்தை யறிவாராருமில்லையே; அப்பெருமான் ஒருகால் தோஷங்களை தோஷமாகவே கொள்ளக்கூடும். ஒருகால் குணமாகவும் கருதக்கூடும். ஒருகால் அதைக் காணாமலேயிருக்கவுங் கூடும். ஒருகால் குணங்களையும் தோஷமாகக் காணக் கூடும். எந்த விதத்திலும் அவன் ஸ்வதந்திரன். நியோகபர்யநுயோக அநர்ஹன். ஆகவே அவனது திருவுள்ளமோ ப்ரவ்ருத்தியோ ஒருவருடைய புத்திக்கும் எட்டுமதன்று. இதுதான் ஸித்தாந்தமாகத் தேறி நிற்கும். ஆனால் இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளவேண்டும்:— உலகத்தில் மிக உயர்ந்தவனாகச் சொல்லப்படுகிறவொரு மஹா புருஷனிடத்தில் எந்தெந்த நற்குணங்களிருக்குமோ அவையெல்லாம் நூறா யிரம் மடங்கு அதிகமாய் எம்பெருமானிடத்து உள்ளனவாகப் பேச வேணுமென்று பெரியோர்களின் கொள்கை. கட்கிலியான அவன் ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங் களைச் செய்தருளினபோது அந்த நற்குணங்களை யெல்லாம் குஹஸுக்ரீவ விபீஷணா திகள் திறத்திலே போரப் பொலியக் காட்டியிருப்பதும் காணத்தக்கது. *நிஷாதநாம் நேதா* இத்யாதி தயாசதக திவ்ய ஸூக்தி யொன்றே இங்கு அநுஸந்திக்கப்போதும். பகவான் அவதாரங்கள் செய்வது எதற்காக? என்கிற கேள்விக்குப் பலவாறு விடைகள் பகரலாமானாலும், தனது திருக்கல்யாண குணங்களைக் காட்டுவதற்காகவே திருவவதாரம் செய்கிறான்— என்பதொன்றே பரமார்த்தமான விடை. ஸ்ரீ ராமா யணத்தில் *கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந்* என்கிற உபக்ரமமே இதனை வற்புறுத்தும்.

62. விபவாவதாரங்களில் ஸ்ரீராமக்ருஷ்ணாதிகள் காட்டியருளின ஒவ்வொரு திருக்குணமும் மெய்யன்பர்களின் உள்ளத்தையுருக்குமவை. அத்தகைய திருக் குணங்களை அநுபவிக்கைக்காகவே நாம் ஸ்ரீ ராமாயண ஸ்ரீ பாகவதாதிகளைப் பாராயணம் செய்து போருகிறோம். அத் திருக்குணங்களில் தோஷாரோபணம் செய்து அவற்றை இல்லைசெய்வது பக்தர்களுக்கு உரியதன்று. 'ஒப்புயர்வற்ற கல்யாண குணங்கள் எம்பெருமானிடத்துள்ளன' என்று வெறுமனே சொல்லிவிட் டால் போதுமோ? அந்தச் சொல்லுக்கு ஓர் அர்த்தமிருக்கவேண்டாவோ? இருக் கிறதென்னில் அதை உபபாதித்துக் காட்டவேணுமே! நம்போன்ற ஸாமான்ய புருஷர்களிடத்துக்காணும் குணங்களிலும் ஏகதேசத்தையுங்கூட எம்பெருமா னிடத்தில் இசைகின்றிலீர்களே. உலகில் குற்றங்களையும் நற்றமாகக் கொள்ளு மவனை அன்பர்களில் தலைமைபெற்ற சிறந்த புருஷனாகக் கொண்டாடுகிறோம். குணங்களையும் குற்றமாகக் கொள்ளுமவர்கள் அதமர்களென்றும், குற்றத்தைக் குற்றமாகக் காண்பவர்கள் மத்யமர்களென்றும், குற்றங்களையும் நற்றமாகக் கொள்ளுமவர்கள் உத்தமர்களென்றும் உலகில் அனைவருமிசைந்து கூறுவதாம். ஆகவே உத்தம புருஷகுணமாகப் புகழ்பெற்றிருக்கின்ற தோஷ போக்யத்வத்தைப் புருஷோத்தமன் பக்கலிலே இல்லைசெய்வது எப்படிப் பொருந்தும்? இந்தக் கேள்வி இன்று புதிதாக நாம் கேட்பதன்று. முற்காலத்தில் பட்டர் கேட்ட கேள்வி இது.

63. குற்றத்தில் குற்றமென்கிற தன்மையானது உள்ளது; அதனை உள்ள படி காணாமல் அதைக் குணமாகக் கண்டால் இது விபரீதவுணர்ச்சியேயாதலால் எம்பெருமானை [தோஷேஷு குணத்வபுத்தி காரணமாக] ப்ராந்தனென்று சொல்ல நேருமேயென்று சோத்யம் செய்வார்க்கு இன்னமும் கூறுகிறோம். அளவுகடந்த அன்புக்கு உரியவர்களிடத்தில் ப்ரேமபடியாக மருண்டுபோவதுதான் எம்பெருமா னுக்குச் சிறந்த குணம். உலகிலும் குற்றங்களை நற்றமாகக் கொள்வதென்பது எல்லார் திறத்திலும் குணமாகாது; விலக்ஷணப்ரீதி பாத்ரமானவர்களிடத்திலேயே அது குணமாகவுள்ளது. அப்படியே விலக்ஷண பக்த விசேஷ விஷயத்தில் * கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்கிற முறையில் இருகரையுமழியப்பெரு கும் எம்பெருமானது அன்புவெள்ளமானது அப்பெருமானை ப்ராந்தியுள்ளவனாக ஆக்குமானால் அந்த ப்ராந்தியேயன்றோ பக்தர்களுக்குச் சேமநிதி? இந்த ப்ராந்தி எம்பெருமானிடத்து இருப்பதுபற்றியேயன்றோ ஆழ்வார்கள் களிப்பதும் கூத்தாடு வதும். மாலென்றும் பித்தனென்றும் பேயனென்று மிப்படி பல திருநாமங்களை அவனுக்கு ஆழ்வார்கள் சாற்றியுள்ளார்கள். தத்வதர்சிகளில் தலைவர்களான அவர்களது ஸ்ரீஸூக்திகளையே நிதியாகக் கொண்ட நம் ஆசிரியர்கள் அருளிய அரும் பெரும் பொருள்கள் பிறர்க்கு ருசிப்பது எங்ஙனே? ப்ராந்தியும் அதற்கு எதிரிடை யான ப்ரமையும் உபாதி பேதத்தாலே குணமாகவும் தோஷமாகவும் மாறுமென்று தெளியவேணும்.

64. கூரத்தாழ்வான் எம்பெருமானார்க்கு இட்ட தனியனில் *யோ நித்ய மச்யுத பதாம்புஜ யுக்மருக்ம வ்யாமோஹத:* என்று வ்யாமோஹத்தை நிரூபக மாகக் கூறியுள்ளார். மணவாளமாமுனிகள் நம்மாழ்வார்க்கு *ஸ்ரீமாதவாங்க்ரி

ஜலஜத்வய நித்யஸேவாப்ரேமாவிலாசயபராங்குச* என்று கலக்கத்தை நிரூபக மாகக் கூறியுள்ளார்; இந்த வ்யாமோஹமும் கலக்கமும் அப்பேராசிரியர்களுக்கு பூஷணமே யல்லது தூஷணமல்ல. "ப்ரமஸாமாந்யமும் தோஷம், ப்ரமாஸாமாந் யமும் குணம்" என்று நிர்ணயிக்க யாருமதிகாரிகளல்லர். புண்யமென்றுலென்ன? பாபமென்றுலென்ன? இவற்றின் லக்ஷணம் கூறவேணுமென்று கேட்டால் இதற்கு ருஜுவான விடையிறுக்கக் கூரத்தாழ்வானொருவரே வல்லவர். *யத் த்வத்ப்ரியம் ததிஹ புண்யமபுண்யமந்யத்* என்றவர் அவ்வாசிரியரே. அவனது திருவுள்ளத்திற்கு உகப் பானது புண்யம், வெறுப்பானது பாபம்—என்றிவ்வளவேயன்றே புண்யபாப லக்ஷ ணம். பக்ததோஷங்கள் அவன் திருவுள்ளத்தால் ப்ரியமாகத் தோன்றினல் அவற்றில் பாப சப்தவாச்யத்வம் தொலைந்து புண்யசப்த வாச்யத்வமன்றே வந்து விடும். ஆழ்வானும் பட்டரும் எம்பெருமானை ப்ராந்தனென்றே அறுதியிட்டுரைத் தனர். பக்தர்கள் கலங்கி நின்றால் அன்னவர்கள் திறத்திலே பகவானும் கலங்கி நிற்க ப்ராப்தமேயன்றே. அப்படி அவன் கலங்கிற்றிலனாகில் *ரஸோ வை ஸ:* என்று உபநிஷத்து அவனை ரஸமாகவே ஓதினது பொய்யாகுமே. *சுவையன் திருவின் மணாளன் என்றபடி பிராட்டியோட்டைச் சேர்த்தியினால் பரமரஸிகனாகப்பெற்ற பெருமான் ப்ராந்தியை யிட்டே நிரூபிக்க வுரியனென்றே ப்ராமாணிகர்கள் அறுதி யிட்டிருப்பது. "மஹர்ஷிகளின் ஓலக்கத்தில் ப்ரமையையிட்டே நிரூபிக்கவேண்டி யிருந்தவன் ஆய்ச்சிகள் திரளிலே ப்ராந்தியை யிட்டே நிரூபிக்கத்தக்கவனாயினான்" என்றது அர்த்தமில்லாத அதிசயோக்தியன்று; உண்மையுரை. "மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" இத்யாதிகள் இங்கு அநுஸந்தேயம்.

65. எம்பெருமானை தோஷபோக்யனென்று சொல்லலாகாதென்றும் தோஷா தர்சியென்றே [குற்றங்களைக் காணாதவனென்றே] கூறவேணுமென்றும் சொல்லு மவர்களை ஒன்று கேட்கிறோம்; ஸர்வஜ்ஞனென்று பேர் பெற்றிருக்கிற எம்பெருமான் சிலருடைய குற்றங்களை யறியகில்லானென்னில்; இதுவொரு அஜ்ஞானமேயல்லவா? ஸர்வஜ்ஞனை அஜ்ஞனென்றால் அவத்யம் வாராதோ? *யந்நாஸ்த்யேவ ததஜ்ஞதாமநு குணம் ஸர்வஜ்ஞதாயா விது:* என்று ஆழ்வான் அருளிச் செய்துள்ளார். அடியோடு இல்லாததை அறியாமலிருந்தால் ஸர்வஜ்ஞத்வத்திற்குக் கொத்தை வாராது. உள்ளதையும் அறியாமலிருந்தால் ஸர்வஜ்ஞத்வம் எப்படி ஸம்ரக்ஷிதமாகும்? ஹேயமான அந்த அஜ்ஞத்வம் எப்படி குணமாகும்? மேலும், தோஷங்களைக் காணாமையென்பது க்ஷமா குணத்தின் காரியம். அதை வாத்ஸல்யத்தின் காரிய மாகக் கூறுவதும் தவறு. எம்பெருமானுக்கு க்ஷமா குணமுண்டென்று இசைந்தா லும் ப்ரபலமான ஆபத்து அபரிஹார்யமே யாகும். எங்ஙனேயென்னில்;

66. *வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரம் முதலியவற்றால் எம்பெருமான் கர்மாநுரூபமாகப் பலன்களைக் கொடுத்தே தீருவ னென்றும் நிர்ணயிக்கப் பட்டிருக்க, அதற்கு முரணாக க்ஷமா குணத்தைக் காட்ட அவனால் எப்படி முடியும்? என்று கேட்டால் இக்கேள்விக்கு வர்ஷ சதமானாலும் விடையிறுக்க முடியுமோ இவர்களுக்கு? ஏதேனுமொரு விடை கூறினார்களாகில் அது க்ஷமாகுணத்தின் பெருமையைக் குலைத்தே நிற்கும். அதிகாரி விசேஷ விஷயத் தில் சாஸ்த்ரங்களைக் கடந்து க்ஷமிக்கக் கூடுமென்னில், நம் வழியே வந்து நின்றார்

களானார்கள். வாத்ஸல்ய விஷயத்தில் நாம் சொல்லுவது மிதுவே காணீர். ஸர்வஜநவிஷயமாக யாரும் சொல்லுகின்றிலர்.

67. அர்ச்சாவதாரப் பெருமான்கள் திறத்தில் [மூலமூர்த்தியில்] பாதாதி கேசாந்தமான ஸௌந்தர்யலாவண்யங்களை ஆழ்வார்களுமாசாரியர்களும் அனுப வித்துப் பாசுரமிடுகிறார்கள். அர்ச்சா மூர்த்தியில் கூந்தலென்பது காணவே முடி யாது. அப்படியிருக்க, கருங்குழல்கள் தடந்தோள் மேல் தொங்குவதாகவும் திரு நெற்றியில் அலைவதாகவும் அருளிச் செய்கிறார்களே! இது எப்படி பொருந்து மென்று ஒரு பாமரன் கேட்டுவிட்டால் இதுவும் அதிவாதமே யென்று தான் இவர் கள் சொல்லித் தீரவேணும். இதில் அநுபவராஸிக்யம் நவீநர்களுக்கு இப்பிறவியில் உண்டாகவிரகில்லை. இதற்காக வேறு பிறவியைக் கோரவேணுமிவர்கள். "அருளிச் செயல்களையே அருமருந்தாகக் கொள்வோமாக; ஸ்ரீசைலேசத்தனியனையே தஞ்சமா கக்கொள்வோமாக" என்று திருமலையடிவாரத்தில் நீடூழிகாலம் நின்று தவம் புரிதல் நன்று.

68. பெரியாழ்வார் திருமொழியில் *தன்னடியார் திறத்தகத்துத் தாமரை யாளாகிலும் சிதகுரைக்குமேல், என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர்போலும்* என்கிற பாசுரம் (4-9-2) ப்ரஸித்தமானது. ஆழ்வார் இப்பாசுரத்தினால் வெளியிடத் திருவுள்ளம் பற்றிய பொருளை நவீநர்கள் தலை கீழாக்குகின்றனர். அதனை விவரிக்கிறோம். பிராட்டி தன் புருஷகார பலத்தினால் சில சேதனர்களை எம்பெருமான் அங்கீகரிக்கக் கண்டு இவ்வங்கீகாரம் நம்முடைய நிர்பந்தத்திற்காக மாத்திரமேயோ, அல்லது தன் திருவுள்ளமுகந்து திடமாகவே ஸ்வீகரித்தபடியோ என்று தெரிந்துகொள்வதற்காக அந்த பக்தர் விஷயத்தில் சித குரைப்பாள். [அதாவது, நாதா! நான் ஆலோசியாமல் இவர்கட்குப் புருஷகாரம் செய்துவிட்டேன். பிறகு நன்கு பரிசீலனை செய்ததில் இவர்கள் பெருங்குற்றவாள ரென்று தெரியவந்ததால் இவர்களைக் கைவிட்டிடுதல் நன்று என்றுரைப்பாள்.] அப்போது எம்பெருமான் 'லக்ஷ்மீ! இவர்கள் உன்னடியார்களா யிருந்த காலத்தில் ஒருகால் குற்றவாளர்களா யிருப்பினும் என்னடியார்களான பின்பு ஒருபோதும் குற்றவாளர்களாகார்கள்' என்று கூறுவன். அதற்கு மேலும் பிராட்டி எம் பெருமான் திருவுள்ளவுறைப்பை இன்னமும் சோதிப்போமென்றெண்ணி அவர்கள் அபராதிகளே யென்று திடப்படுத்திக் கூறுவள். அப்போது எம்பெருமான் 'என் னடியார் அது செய்யாரென்று நான் ஏற்கெனவே சொன்னேன்; செய்யவே செய் தார்களென்னில், அது நன்றேயன்றித் தீதன்று' என்று சொல்லி மறுபடியும் பிராட்டி வாய்திறக்க வொண்ணாதபடி செய்தருள்வன். [அது கேட்டுப் பிராட்டியி னுள்ளம் பூரிக்கும். இந்த வார்த்தையைக் கேட்பதற்காகவே நாம் சிதகுரைத் தோம். அது ஸபலமாயிற்று என்று கொண்டு மிகவுகப்பள்.] ஆகவிப்படி ஆச்ரித பக்ஷபாதத்தைக் காட்டி யருள்பவன் யாவனென்னில், ஸ்ரீ விபீஷணாழ்வான் திறத் துக் கடற்கரையில் பண்டு காட்டின பக்ஷபாதத்தை இன்னமும் காவிரிக்கரையிலே காட்டிக்கொண்டு சாய்ந்தருளும் நம் திருவரங்கனே. அவ்வரங்கனுக்கன்றி நாம் மற்றவர்க்கு ஆட்படத்தகுமோ? என்கிற விது *தன்னடியார் பாசுரத்தின் தலை சிறந்த தாற்பரியம். இவ்வழகிய தாற்பரியங்கொண்ட பாசுரத்தையும் இவர்கள்

தூஷிக்கத் தலைப்படுகின்றனர். ச்ருத ப்ரகாசிகையின் கதியே அங்ஙனகும்போது இதில் வியப்பொன்றுமில்லையே. இப்பாசுரத்தில் இரண்டாமடியின் முடிவில் போலும் என்று இடைச்சொல்லொன்று உளதென்று அது கொண்டு இவர்கள் செய்யும் ஆகாசதாண்டவம் விசித்திரமானது.

69. விபீஷணழ்வானிடத்துள்ள பக்ஷபாதம் இப்பாசுரத்தின் பின்னடிகளில் ப்ரஸ்தாவிக்கப் பட்டிராநின்றது. இதுவே யிங்கு ஸாரமான விஷயம். ஸ்ரீ சக்ரவர்த்தி திருமகனுர்க்கு விபீஷணழ்வான்திறத்து இருந்த அன்பு எத்தகைத்து என்பதை ஸ்ரீ தேசிக திவ்ய ஸூக்திகளைக் கொண்டே அறுதியிடவேணும். விபீஷணன் *நிவேதயதமாம் க்ஷிப்ரம்* என்று அடைக்கலம் புகுந்தவன்று இரண்டு பக்ஷங்கள் தோன்றின; இவன் துஷ்டனுகையாலே அங்கீகரிக்கத்தகாதவனென்று ஸுக்ரீவ பக்ஷத்திற்பேச்சு; இவன் அதுஷ்டனுகையாலே அங்கீகரிக்கத் தக்கவனே யென்று திருவடி பக்ஷத்திற் பேச்சு. இது அனைவருமறிந்ததே. பெருமாள் ஸுக்ரீவ பக்ஷத்தைக் கண்டித்து மாருதி பக்ஷத்தை ஆதரித்ததாக எல்லாரும் க்ரஹித்திருப்பர்கள்.

70. அங்ஙனன்றிக்கே பெருமாள் ஸுக்ரீவ பக்ஷத்தோடொப்ப மாருதி பக்ஷத்தையும் கண்டித்து மூன்றுவதாக வொரு விலக்ஷண பக்ஷத்தைத் தாம் வெளியிட்டருளினதாக அபயப்ரதாநஸாரத்தில் ஸ்வாமி தேசிகன் அற்புதமாக அருளிச் செய்கிறுர். அந்த மூன்றுவது பக்ஷம் எதுவாயிருக்குமென்று வித்வான்கள் தம்தம் உள்ளத்தில் சற்று ஆலோசித்துப் பார்க்கலாமே. மேதாவிகளில் தலைவரான தேசிகனுடைய மேதைக்கே நிலமானவது மற்றையோருடைய மதிக்கு எட்டுமோ? அவர் எடுத்துக்காட்டி யருளின திவ்யமான பொருளை ஆர்ஜவத்துடன் ஏற்று அனுபவிக்கப் பெற்றுல் அது போதுமே. இவ்விசேஷார்த்தம் பிறர்க்கு துரவகாஹமாதலால் நாமே விசதீகரிப்போம். ஸுக்ரீவமாருதிகளின் இரண்டு பக்ஷங்களிலும் ஸாத்ய ஹேதுக்கள் உண்டே; ஸுக்ரீவபக்ஷத்தில் ஸாத்யாம்சத்தைக் கண்டித்தும் மாருதி பக்ஷத்தில் ஹேத்வம்சத்தைக் கண்டித்தும் போந்தார் பெருமாள். இவன் துஷ்டனுகையாலே ஸ்வீகரிக்கத்தகாதவன் [த்யாஜ்யன்] என்ற முந்தின பக்ஷத்தில் த்யாஜ்யத்வ ரூபமான ஸாத்யாம்சமொன்றையே கண்டித்தார்; துஷ்டத்வமென்னும் ஹேதுவைக் கண்டிக்கவில்லை. இவன் அதுஷ்டனுகையாலே ஸ்வீகார்யன் என்ற பிந்தின பக்ஷத்தில் அதுஷ்டத்வமாகிற ஹேதுவைக் கண்டித்து ஸ்வீகார்யத்வமாகிற ஸாத்யாம்சத்தை ஏற்றுக்கொண்டார். ஆகவே பெருமாளுடைய மூன்றுவது பக்ஷமாகத் தேறினது யாதெனில், விபீஷணன் தோஷவானுகையினுலேயே ஸ்வீகரிக்கத் தக்கவன் என்பதாகத் தேறிற்று. இங்ஙனே நுட்பமாகக் கண்டுபிடித்தருளிச் செய்த தேசிகனது திவ்ய ஸூக்தியை அவரை யடிபணியுமவர்களாகச் சொல்லிப் போருமவர்களே அபலாபம் செய்யும் முகத்தால் தூஷித்து நிற்கிறுர்கள். ஸ்வாமி இவ்வர்த்த விசேஷத்தை யருளிச் செய்தவிடமோ ரஹஸ்ய க்ரந்தம். சாஸ்த்ரார்த்த தத்துவங்களை வெளியிடுதற்கென்றே அவதரித்தது ரஹஸ்ய க்ரந்தம் என்பது ஞாபகமிருக்கவுரியது.

71. இனி மேலே காட்டின பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தை ஆழ்ந்து ஆராய்ந்து ஆழ்வாருடைய திருவுள்ளத்தை அறுதியிடவேணும். பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஒரு ஸம்வாதம் நிகழ்ந்ததாக அப்பாசுரத்தில் அமைக்கப்

பட்டுள்ளது. அது கவி முறையில் கல்பித மென்கின்றனர். உண்மையில் ஸம்பா விதமானதே அது. ஸர்வஜ்ஞர்களான ஆழ்வார்களே அதனையறியவல்லார். அனுக்ரஹமயியான பிராட்டி எப்படி சிதகுரைப்பளென்று பிறர் க்ஷேபித்துக் கொண்டேயிருப்பர்கள். ஸ்தூணநிகநநந்யாயத்தாலே இது ஸம்பாவிதமே யென்பதை நன்கு நிரூபித்திருக்கிறோம். எம்பெருமானது திருவுள்ளவுறுதியைப் பரீக்ஷிக்கைக்காகவே சிதகுரைக்கத் தோன்றிற்று. பிறகு எம்பெருமான் கூறின வுத்தரத்தினுல் பிராட்டிக்குண்டான ஹர்ஷப்ரகர்ஷத்தை யாரே யறிவார்? அப்படிப்பட்ட மகிழ்ச்சியைப் பெறுவதற்காகவே யன்றோ பிராட்டி முன்னம் ஸ்வஸ்வரூப விருத்தமான சிதகுரையிலே ஊன்றி நின்றது. இந்த ஸம்வாதம் நடந்ததில்லை யென்று கொண்டாலும் * ருஷீணும் புநராத்யாநாம் வாசமர்த்தோநுதாவதி * என்ற கணக்கிலே இவ்வருளிச்செயல் அவதரித்த பின்பாவது இது நடந்தே யிருக்கவேண்டுமாதலால் ஸர்வாத்மநா ஸத்யமானதேயிது என்று கொள்ள வடுக்கும்.

72. இந்த ஸம்வாதம் கல்பித மென்கிற பிறர் கொள்கையின்படியேதான் இருக்கட்டுமே. ஸம்வாத கல்பனைக்கு ஒரு பலன் இருந்தே தீரவேணுமாதலால் இங்கு என்ன பலன் தேறுகிறதென்பதை இவர்களே ஆராய்ந்து கூறுக. பிராட்டி சேதநாபராதத்தைத் திடப்படுத்திக் கூறியபின் எம்பெருமான் செய்த காரியமென்ன? அந்த அடியார்களைக் கைவிட்டு விட்டாஞ? கைக்கொண்டாஞ? என்று கேட்கிறோம், கூறவேணும். கைவிட்டு விட்டானென்று கூற உங்கட்கும் வாய் எழாதாதலால் கைக்கொண்டானென்றே கூறவேண்டியதாகும். 'என்பர் போலும்' என்றிருப்பதனுல் வஸ்து வ்ருத்தியில் நன்றன்று என்று கூறினதாகத் தேறுகின்றதென்கிற வாதமொன்று வலிதாக இருப்பதால், இந்த வாதத்தின்படி அந்த சேதநர்களின் தோஷ பூயிஷ்டத்வமே எம்பெருமானுல் திடப்படுத்தப்பட்டதென்று தேறுகிறது.

73. அங்ஙனம் துஷ்டத்வத்தைத் திடப்படுத்திக்கொண்டே அவர்களை எம்பெருமான் ஸ்வீகரித்துக்கொண்டானென்று நீங்கள் சொல்லுகிறபடியால் இதனுல் பலித்ததென்னவென்று பார்க்க. அங்கீகாரத்திற்குக் குற்றமே பச்சையாயிற்றென்று தேறுமே யல்லாது வேறென்றும் தேருது. மரத்தின் முடியிலிருந்து கொண்டு அடிமரத்தை வெட்டுவார்கணக்காயிற்று. தோஷம் அங்கீகாரத்திற்குப் பச்சையாகாதென்று ஸாதிக்கப் பட்டபாடெல்லாம் விபரீதபலமாய் முடிந்தது காணீர். இனி, தங்கள் பிடிவாதத்தைக் காத்துக்கொள்ளவேண்டி, எம்பெருமான் பிராட்டியின் சிதகுரையைக் கேட்டு அவ்வடியார்களை உதறித் தள்ளிவிட்டானென்றே இவர்கள் சொல்லியாகவேண்டும். இங்ஙனம் அவர்களை யொதுக்கித் தள்ளும்படிக் குறுப்பாகவே பிராட்டி பாடுபட்டாளென்கிற இவ்வர்த்தம் மிகவழகியதே! திவ்ய தம்பதிகளுக்கு இத்தகைய சிறந்த குணத்தைப் பெறுவிப்பதும் இங்ஙனே பெறுவிப்பதற்காகவே ஆழ்வார் ஒரு ஸம்வாதத்தைக் கல்பனை செய்து பாசுரமமைத்தாரென்பதும் இவர்கட்கே உரிய அழகிய வார்த்தையாம். திவ்ய தம்பதிகளுக்கு ஒரு குணேத்கர்ஷத்தை நிலை நாட்டவேண்டி ஆழ்வார் செய்த செயலை இப்படி விபரீதமாக்க வல்லவர்கட்கே உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யத்வவிருது உத்கோஷிக்கத் தகும்!

74. வத்ஸல: என்கிற பதமானது * வத்ஸாம்ஸாப்யாம் காமபலே * என்கிற பாணிநி ஸூத்ரத்தாலே தேறியது. காமமென்கிற அர்த்தத்தில் லச் ப்ரத்யயம் வருமென்பதை வத்ஸபதத்தின்மேல் விதித்த பாணிநி மஹர்ஷியின் உள்ளம் ஆராய்ந்துணரவுரியது. இத்துடன் பலார்த்த ப்ரத்யயத்தை அம்ஸ பதத்தின்மேல் விதித்திருப்பது ஸாபிப்ராயமல்லவா? [வலிமைக்கு இருப்பிடம் தோளாதலால்.] அப்படியே ப்ரேமத்திற்கு லக்ஷ்யம் வத்ஸமாதலால் அதையிட்டு ப்ரத்யய விதாநம் பண்ணினது, வத்ஸத்தினிடத்தில் பசுவுக்குள்ள ப்ரேமம் போன்ற ப்ரேமத்தை யுடையவன் வத்ஸலன் என்று காட்டினபடி யல்லவா? பசுவுக்குக் கன்றினிடத்துள்ள அன்பு தோஷபோக்யத்வ ரூபமாகவன்றோ உலகில் நன்கு காண்கிறது. இதை ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் பட்டரும், ஞானஸாரத்தில் அருளாளப் பெருமாளெம் பெருமானரும் நன்கு நிரூபித்தருளினரென்பது பண்டே நிரூபிதம். குணோத்கர் ஷங்களை எம்பெருமானிடத்தில் நிரூபிப்பதைவிட்டு குணதரித்ரர்களான க்ஷுத்ரர்க ளிடத்தில் விசேஷகுணங்களிருப்பதாக இவர்கள் பேசிக்கொண்டு நாள்கட்லைக் கழிப்பது இவர்கட்கு நன்றே

75. திருமழிசைப்பிரான் "செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞால நாதனே" என்று பிரார்த்திக்கிறுர்; குற்றத்தை நற்றமாகக் கொள்ளுங் குணம் எம்பெருமானிடத்துள்ளதென்று உணர்ந்தன்றோ இங்ஙனம் பிரார்த்திக்கிறுர். இவ் வாழ்வார் பேயாழ்வாருடைய சிஷ்யராதலால் இவரும் ஒரு பேயார் என்பர் போலு மிவர்கள். தேசிகன் தயாசதகத்தில் *மயிநிஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே மிததோ ஷாநிதராந் விசிந்வதீத்வம்; அபராதசதைரபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே! கதம் பவித்ரீ* *ப்ரபலவ்ருஜிநப்ராப்ருதப்ருதாம்* இத்யாதி ஸ்ரீஸூக்திகளாலே உணர்த்தி யருளின அர்த்தவிசேஷங்களும் நவீநர்களுக்கு தூஷணீயங்களாய்விட்டன. (12)

# 13. தயாகுணஸ்வரூப நிரூபணம்

76. எம்பெருமானை தயாளுவென்று போற்றுகிறேம். தயையாவது என்ன? என்னில், பிறர் படும் துயரத்தைக்கண்டு தானும் துயருறுவது தயை என்று ஸதாசார்யர்களின் திருவுள்ளம். ஆநந்தமயனை எம்பெருமானுக்கும் துயருண் டென்று கொள்வது அவத்யமாகையாலே பிறர்படும் துயரத்தைத் தவிர்க்க நினைப் பது மாத்திரமே தயை என்னத்தகும் என்பர் பிறர். எம்பெருமானிடத்தில் பர து:க்க நிராகரணேச்சை [அதாவது பிறர்படும் துயரத்தைத் தவிர்க்க நினைக்கை] இல்லையென்று யாரும் சொல்லகில்லார். அதுவுள்ளதென்பது ஸம்ப்ரதிபந்நம். அது வொரு ஸாமாந்ய குணமே யல்லது விசேஷ குணமன்று. பிறர்படும் துயரத்தைக் கண்டு ஐயோவென்று தானும் துயருறுகையே தயையென்றும் இதுவே மிகச்சிறந்த விசேஷகுண மென்றும், இதனை இல்லைசெய்வது நிர்க்குணப்ரஹ்மவாதத்தோ டொக்கு மென்றும் ஆழ்வார்களும் எம்பெருமானர் முதலான ஆசார்யர்களும் திருவுள்ளம் பற்றுகிறுர்கள்.

77. கீழ்ச்செய்த வாத்ஸல்யவிசாரம்போலே இந்த தயாவிசாரமும் மிக முக்கியமானது. பரது:க்க து:க்கித்வ மென்பது மிகவுயர்ந்த குணமென்றும் இதுவே

எம்பெருமானுடைய குணங்களிலேயுருகும் மெய்யன்பர்களின் உள்குழைவுக்கு உறுப்பானதென்றும் உண்மையைத் தெளிய வுணரவேணும்.

78. பிறர்படும் துயரத்தைக் கண்டு ஐயோ வென்றிரங்குகை குணமா? தோஷமா? என்று முதலில் ஆராயவேண்டும். இதை தோஷமென்று யாரும் சொல்லார். *நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை நோக்குங்கால், பரதுக்கங்களிலே முறுவலிப்பது ஹேயமென்றும், கரைந்து ஏங்குவது உற்றதென்றும் நன்கு தெரிகின்றது. கரைந்து ஏங்குமவர்களையே நல்லுற்றாரென்கிறது. துக்கத்தின் எல்லையிலே நிற்பதுதான் கரைந்து ஏங்குவது. இதை நல்லுற்றாருடைய செயலாக அருளிச்செய்கின்ற ஆழ்வாருடைய திருவுள்ளம் இது குணமென்பதே யன்றோ? இது குணமன்று என்று சொல்வதற்கு ஒரு விதமான உபபத்தியும் இருக்க நியாயமில்லை. மனுஷ்யர்களுக்கு இது குணந்தானென்று தேறி விடுமாகில் இக்குணம் எம்பெருமானிடத்தில் அதிசயிதமாக இருந்து தீரவேணுமென்பது புநருக்தம்.

79. ஒருவரிடத்தில் ஒரு குணமுள்ளதென்பதை நாம் எங்ஙனம் தெரிந்து கொள்ளுகிறோம்? குணவானுடைய நடத்தையைக் கண்டும், அந்த நடத்தையைக் கண்ட ஆப்தர்கள் சொல்லுமது கொண்டும் தெரிந்துகொள்ளுகிறோம். எம்பெருமான் தனது தயாகுணத்தை எந்தெந்த நடத்தைகளினால் காட்டினனோ அந்த நடத்தைகளெல்லாம் ஸ்ரீராமாயண பாரத பாகவதாதிகளில் விசதம்.

80. எம்பெருமான் அவதாரங்கள் செய்தருளினது எதற்காக வென்றால் தன்னிடத்துள்ள சிறந்த திருக்குணங்களை வெளியிடுதற்காகவே யென்பது பரமார்த்தம். இதைத்தான் பட்டர் *குண பரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்கிற ஸ்ரீஸூக்தியால் நன்கு காட்டியருளினார். ராவண ஸம்ஹாரம் கம்ஸவதம் சிசுபால வதம் முதலிய பலவகைக் காரியங்களுக்காகவாயிற்று எம்பெருமான் இந்நிலவுலகத்தில் அவதரித்தது என்று ஸாமானியர்கள் நினைக்கும்படி யிருந்தாலும் உண்மையதுவன்று. ஸங்கல்ப மாத்ரத்தாலே ஸகலத்தையும் நிர்வஹிக்கக்கூடிய சக்திவாய்ந்த எம்பெருமான் புழுக்கள் போன்ற அரக்கர்களுடையவும் அசுரர்களுடையவும் ஸம்ஹாரார்த்தமாக அவதரித்தானென்கை அப்பெருமானுக்குப் பழிப்பாகவும் தலைக்கட்டும். தனது திருக்குணங்களைக் காட்டுவதற்காக அவதரித்தானென்பதே பரமார்த்தம். இதைத்தான் ஆழ்வார் திருவாய்மொழியில் *மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க் களித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே* என்ற பாசுரத்தினால் விளங்கக் காட்டியருளினர். இதன் திவ்யார்த்தந்தன்னையே கூரத்தாழ்வான் *யா கம்ஸமுக்க்யந்ருபகீடநிபர்ஹணேத்தா ஸா நிர்ஜிதத்ரிஜகதஸ் தவ நைவ கீர்த்தி:* என்பது முதலான பல சுலோகங்களினால் விவரித்தருளினர். இவ்வளவையும் கபளீகரித்தது *குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம் என்கிற பட்டர் ஸ்ரீ ஸூக்தி.

81. இங்ஙனே எம்பெருமான் அவதரித்து எந்த குணங்களைக் காட்டியருளினானென்று விமர்சிக்க வேண்டுவது அவசியம். இதனை நாம் இன்று புதிதாக விமர்சிக்க வேண்டாதபடி பண்டே ஸாக்ஷாத்தாக அநுபவித்த அயோத்யா வாஸிகள்

அக்குணங்களை விரிவாக வெளியிட்டுள்ளார்கள். அயோத்யாகாண்டத்தில் *பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே* என்று பீடிகை யிட்டுக் கொண்டு எண்ணில் பல்குணங்களை அழகாக எடுத்துரைத்திருக்கக் காணுநின்றோம். அந்த ப்ரகரணத்தில் தான் *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:* என்றுள்ளது. இதனால் பரதுக்க துக்கித்வமே நன்கு தெரிவிக்கப் படுகின்றது. இது குணவர்ணந ப்ரகரணத்தில் கூறப்பட்டிருப்பது கொண்டே இதனைக் கல்யாணகுண விசேஷமென்று கொள்ளக்குறையில்லை என்று நம் பூருவாசாரியர்கள் பணித்தார்கள்.

82. இவ்விஷயத்தை நன்கு ஆராய்ந்தே நிஷ்கர்ஷிப்போம். எம்பெருமான் அகில ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநன் என்று வேதாந்தங்களிற் புகழப்படுகிறான். அவனிடத்தில் விரும்பத்தக்க சுபகுணங்கள் குடிகொண்டிருக்கின்றனவேயன்றி வெறுக்கத்தக்க ஹேயகுணம் ஒன்றுகூட இல்லையென்பது தாற்பரியம். சோக மென்பது ஹேயகுணமேயன்றிக் கல்யாணகுணமன்றே. ராமக்ருஷ்ணாதிவிபவாவ தாரங்களில் சோகங்கொண்டிருந்ததாக விளங்குகின்றதே; ஹேயகுணமான சோகத்தைக்கொண்ட எம்பெருமானை அகில ஹேயப்ரத்யநீகனென்று எங்ஙனே போற்றலாம்? என்கிற ஆராய்ச்சியில் சில பெரியார் எழுதியுள்ள ஸமாதான மாவது—அவதாரங்களிற் காணும் சோகமோஹாதிகள் வெறும் அபிநயமாத்திரமே யாதலால் ஆபத்தி யொன்றுமில்லை யென்றும்.

1. அவதாரங்களிற் காணும் எல்லாவகையான சோகங்களும் அபிநய ரூபங்களேயா? அவற்றில் ஏதேனும் பாகுபாடு உண்டா? என்று விமர்சிக்க வேணும். உலகில் சோகம் இரண்டு வகையாகக் காண்கிறது; 1. ஸ்வார்த்த சோகம். 2. பரார்த்த சோகம். தன்காலில் அடிபட்டு அதனால் ஒருவன் துடிக் கிறான். பிறர் துக்கப்படுவதைக்கண்டு ஒருவன் துடிக்கிறான். ஆக இவ்விருவரும் பொதுவாக சோகப்படுகிறவர்களே யானாலும், முதல்வனுடைய சோகம் ஸ்வார்த்த சோக மென்றும், இரண்டாமவனுடைய சோகம் பரார்த்தசோகமென்றும் வழங்கப் படுகின்றது. இவ்விருவகையான சோகமும் விபவாவதாரங்களில் பகவானிடத்துக் காண்கின்றது. பொதுவிலே எல்லாவிதசோகமும் அபிநய ரூபமென்றே சிலர் நினைக் கிறார்கள்; இது ஸமஞ்ஜஸமன்று.

2. ஸ்ரீ ராமாயணத்தில் ஒரு பிரகரணம் எடுத்துக்கொள்வோம். வாலி மாண்டபின்பு பெருமாள் திருவுள்ள முடைகுலைப்பட்ட படியைப் பேசுகின்ற வால்மீகி முனிவர் *ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ* என்கிறார். இப்படிப்பட்ட பிரமாணங்கள் மற்றும் பலவுமுள்ளன வேனும், இஃதொன்றை விமர்சிப்போம்.

3. முன்னம் "ஸஞ்ஜாத பாஷ்ப:" என்று வாலிக்காகப் பெருமாள் கண்ணீர் விட்டழுதார் என்றான் ரிஷி. அது மேலுக்கு அழுதபடியோ? அன்றி உள்ளிலும் வெதுப்புண்டோ என்ன, 'விமநா பபூவ' என்று உடனே சொல்லிற்று. மனமும் விகார மடைந்துவிட்டது என்று நன்கு காட்டப்பட்டிருக்கிறது. இது ஸ்வார்த்த மான சோகமன்று, பரார்த்தமான சோகம் என்பது நிர்விவாதம். இத்தகைய சோகமுங்கூட அபிநய ரூபமேயென்று கொள்வதானால் சாஸ்த்ரார்த்தங்கள் மிகவும்

வியாகுலப்பட்டுவிடும். ஏனென்றால், எம்பெருமானுக்கு ஸ்துதி ரூபமாகப் பல விசேஷணங்களையும் ஸம்போதனங்களையும் எம்பெருமானார் முதலான மஹாசார்யர்கள் இடுகிறார்கள். அவற்றை வியாக்கியாநிக்கும்போது ஸ்ரீமத் வேதாந்த தேசிகனுள்ளிட்ட ஆசிரியர்கள், *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துக்கித:* ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ* என்றிது முதலான பிரமாணங்களை மேற்கோளாக எடுத்துக் காட்டியே ஒவ்வொரு திருக்குணங்களையும் மூதலிக்கக் காண நின்றோம்; அபிநய ரூபமான விஷயத்தை யெடுத்துக்காட்டி ஒரு சாஸ்த்ரார்த்தம் நிர்ணயிக்கலாகுமோ?

4. நாளைக்கும் நாடகக்காட்சிகளில் வேஷங்கட்டியாடுகின்ற பலருடைய துக்காபிநயங்களை நாம் கண்டு வருகின்றோம். அதைக்கொண்டு அந்த சைலூஷனை நாம் காருணிகனென்றாவது தயாளுவென்றாவது சொல்லுவதுமில்லை, நினைப்பதுமில்லை. நன்றாக அபிநயிக்கிறானென்று தலைதூக்கிக் கொண்டாடுகிறோமித்தனை. ராமக்ருஷ்ணாத்யவதாரங்களில் இப்படி அபிநயிக்கிற சோகங்களைக் குறித்தா *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துக்கித:* என்று அயோத்யா வாஸிகள் கொண்டாடினார்கள்? * ஸஞ்ஜாத பாஷ்ப: * இத்யாதியாகச் சொன்னதும் மேலுக்கு அபிநயித்த படியைக் கொண்டா? எம்பெருமானுடைய குணங்களைக் கொண்டாடுவதற்கு உறுப்பாயிருக்கின்ற விஷயங்களை அபிநயரூபமென்று சொல்லிவிடுவதானால் நமக்கு அநுபவ சாஸ்திரம் என்ன இருக்கிறதென்று ஆராயவேணும். ராமக்ருஷ்ணாத்யவதார திருக்குணங்களிலே நீர்ப்பண்டமாயுருகி நையும் ஆழ்வாராசாரியர்களின் கோஷ்டியில் அபிநயமென்கிற வார்த்தை தலைகாட்டப் பெறாது.

5. ஸஹஸ்ரநாமத்தில் *ஸத்ய மேதா:* என்பது ஒரு திருநாமம். ஸத்யமான மேதையையுடையவன் என்று பொருள். *வல்லவவஸுதேவாதி ஸாஜாத்யாபிமாநிநீ மேதா ஸத்யா அஸ்ய, ந நடநமாத்ரம்* என்று பட்டர் பாஷ்யமிட்டருளியுள்ளார். இங்கே 'ந நடநமாத்ரம்' என்றதற்கு நடனமும் உண்டு என்று சிலர் பொருள் கூறுவது ஆச்சரியம். *ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராமஸௌ குருகுலக்லிஷ்ட:* என்னும்படியுள்ளார் இப்படி பொருள் பணிக்கத்துணியார். அங்கு பாஷ்யத்தில் மேலே நிரூபித்திருப்பதற்குச் சிறிதும் ஏலாது. சப்தஸ்வாரஸ்யத்திற்கும் பொருந்தாதது. சாஸ்த்ரார்த்தமுமன்று. மூலத்துக்கும் சேராது. நடநமாத்ரமென்று சொல்லுமவர்களை வாய்மாளப்பண்ணுதற்காக 'ந நடநமாத்ரம்' என்ற சொல்வடிவம் அமைந்தது.

6. அன்றியும் இது பட்டருடைய ஸ்ரீஸூக்தியென்பதும் விசேஷித்து நெஞ்சிற் கொள்ளத்தக்கது. ஆவதென்? என்னில்; *மின்னிடை மடவார்கள்* என்கிற திருவாய்மொழியில் ஆறும் பாட்டில் *கழகமேறேல் நம்பீ* என்றவிடத்து பட்டருடைய ஈரச்சொற்கள் ஈட்டில் ஸேவிக்கப்படுகின்றன. (எங்ஙனே யென்னில்);

7. "இவ்விடத்தே பட்டர் அருளிச் செய்வதொரு வார்த்தையுண்டு;— ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸர்வ நியந்தாவா யிருக்கிற ஸர்வேச்வரன் நாலிடைப்பெண்களிருந்த விடத்தே புக்கல்லது நிற்கமாட்டாத செல்லாமை விளைய, அவர்கள் நீ இங்குப் புகுராதேகொள் என்ன: விலங்கிட்டாப்போலே பேரவும்

திரியவும் மாட்டாதே தடுமாறி நின்றனென்கிற ஸௌசீல்யம் தங்களையும் இவர்களையுமொழிய ஆரறிந்து கொண்டாட வ்யாஸாதிகள் எழுதியிட்டு வைத்துப் போனர்களோ! என்றருளிச் செய்வர்.''

8. (இதற்கு மேல் நம்பிள்ளையின் ஸ்வீய ஸ்ரீ ஸூக்தி.) ''ஸர்வ நியந்தாவானவன் சிலர்க்கு நியமிக்கலாம்படி எளியனானான் என்றால் இது மெய்யென்று கைக்கொள்ளுவாரைக் கிடையாதிறே. சாஸ்த்ரங்களெல்லாம் ஈசேசிதவ்ய விபாகம் பண்ணி ஒருங்கவிடாநிற்க அத்தலை யித்தலையாகச் சொல்லுகிறதிறே இது'' என்று.

9. பகவத் குணங்களில் அதிசங்கைகொள்வார் அநாதிகாலமாகவே உளர் என்பதும், பட்டர் போல்வாரான சிலரே பகவத் குணங்களில் ஆழ்ந்து நையுமவர்கள் என்பதும் இவற்றால் நன்கு அறியக் கிடக்கின்றதன்றே. ஆகவே ஸத்ய மேதா: என்கிற திருநாமத்திற்கு அஸத்ய மேதா: என்று கருத்துப்பட பாஷ்யமிட்டார் பட்டர்—என்பது செவியேற்கவும் தக்கதன்றே.

10. இன்னமும், ஸ்வார்த்த சோகம் பரார்த்த சோகம் என்று வகையிட்டு, பரார்த்த சோகம் குணமே யல்லது தோஷமன்று என்றும், அது எம்பெருமானுக்குச் சிறந்த பெருங்குணமென்றும் ஸ்பஷ்டமாக அருளிச் செய்தவர் பட்டரே யாவர். ஸஹஸ்ரநாமத்தில் விகர்த்தா என்னும் திருநாமத்தின் பாஷ்யம் காண்க. *விகர்த்தா-ஸ்வார்த்தஹர்ஷசோகாத்யபாவேபி பரார்த்ததத்ப்ரஸக்திரதோஷ:. அந்யதா பரது:க்கது:க்கித்வாதயோ குணா: கதமஸ்ய ஸ்யு:? என்பது பட்டர் ஸ்ரீ ஸூக்தி. விகர்த்தா என்கிற திருநாமத்திற்கு மநோவிகாரமடைகிறவர் என்றே பொருளருளிச் செய்து, எம்பெருமானுக்கு ஸ்வார்த்தமான ஹர்ஷ சோகம் முதலானவை உண்மையில் இல்லையாயினும் பரார்த்தமான ஹர்ஷ சோகங்கள் உண்டாமது அவத்யமன்று: அப்படி ஒப்புக்கொள்ளாவிடில், எம்பெருமானுக்குப் பரது:க்கது:க்கித்வம் முதலானவை சொல்லப்படுகின்றனவே, அவை எப்படி குணமாக ஆகும்? என்கிறாரிறே இங்கு பட்டர்.

11. இதனால் ஸ்வார்த்த ஹர்ஷ சோகங்களிற் காட்டில் பரார்த்தஹர்ஷ சோகங்களுக்கு நெடுவாசியுள்ளதாக பட்டர் திருவுள்ளம்பற்றி யிருக்கின்றமை நன்கு விளங்குகின்றது. *பரார்த்ததத்ப்ரஸக்தி:அதோஷ:* என்கிற ஸ்ரீ ஸூக்தி இங்கு அமைந்திருக்குமாற்றை நன்கு ஆராய்ந்து பார்க்குமளவில் 'எம்பெருமானுக்கும் விகாரமுண்டென்று சொன்னால் நிர்விகாரத்வ [அகிலஹேயப்ரத்யநீகத்வ] ச்ருதிக்கு தோஷம் வருமென்று சிலர் ஆபத்தி பண்ணினதாகவும் அந்த ஆபத்திக்கு இடமில்லையென்று ஸ்வாமி (பட்டர்) பரிஹாரம் ஸாதிப்பதாகவும் ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. பரது:க்க து:க்கித்வ மென்பது எம்பெருமானுக்குச் சிறந்த குணமென்றும் அடுத்த வாக்கியத்தினால் நன்கு விளக்கியுள்ளார். பொய்யான துக்கத்தைக் கொண்டு இவ்வளவு பாஷ்யமிட்டருளினரென்றால் இது பொருந்துமோ? ''யானையும் பொய், நான் அஞ்சியோடினதும் பொய்'' என்று ஓர் அத்வைதி சொன்னரென்று கதை சொல்லுகிற கணக்கிலே இதிஹாஸ புராணங்களெல்லாவற்றையுமே பொய்யாக்கவேண்டிவருமே.

ஸ்ரீலோகாசார்ய ஸித்தாந்தஸாரத்தில் தயாகுணஸ்வரூப நிரூபணம் முற்றிற்று.

(தொடரும்)

## யதார்த்த ராமாநுஜனெண்பத்திரண்டின் முடிவு

28—6—72 முதல் 10—7—72 வரை திருமலையில் நடைபெற்ற ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண மஹாக்ரதுவில் அந்வயிக்க வந்திருந்தவர்களில் ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதர்கள் 250 திருநாமங்களுக்குக் குறையில்லை. அவர்களுள் விவேகிகளும் வாவதூகர்களுமான சிறந்த பண்டிதர்கள் 200 திருநாமங்கள் தேறினார்கள். அவர்களில் ஒருவர் தப்பாமல் அனைவரும் யதார்த்த ராமாநுஜ னெண்பத்திரண்டை [இரண்டு எண்பத்திரண்டையும்] பூர்த்தியாக வாசித்து ஏகமுகமாகச் சொன்ன வார்த்தை ஒன்றே;—''யதார்த்த ராமாநுஜ னென்கிற நிந்தைக் கந்தையை நாங்கள் ஒருவரும் பார்த்ததில்லை; அது எங்களுக்கு எட்டவுமில்லை; ஆனாலும் அதைப் பார்த்தவரான ஸ்ரீ உ. வே. மதுராந்தகம் ஸ்வாமி அது காசுக்கு முதவாத கந்தை யென்றும், பூர்வோத்தர விருத்தங்களான பேச்சுக்களும், ஆதுநிகர்களோடு பூருவாசாரியர்களோடு வாசியற எல்லாரையும் திட்டுவதும் தவிர வேறொன்றும் அதில் கிடையாதென்றும் பலர்முன்பே ஸாதிக்கக் கேட்டவர்கள் பலருளர். அதைப் பொருள் படுத்தி இவ்வளவு விரிவு மிகவும் அவசியமற்றதென்றும் சொல்லி, திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் *கோழி வெண்முட்டைக்கு என்செய்வதெந்தாய்! குறுந்தடி நெடுங்கடல்வண்ணா!* என்கிற பாசுரம் தேவரீருக்குத் தெரியாததன்றே'' என்று தலைக்கட்டினார்கள்.

பெரிய திருமொழியில் பத்தாம்பத்தில் ஒன்பதாவது பதிகம் ''பழமொழியால் பணிந்துரைத்த பாட்டிவை'' என்று ஆழ்வார் தாமே நிகமித்தருளினபடியே ஒவ்வொரு பாட்டும் பழமொழியொன்று கொண்டது. அதில் ஏழாவது பாட்டில் ''கோழி வெண்முட்டைக் கென்செய்வ தெந்தாய்! குறுந்தடி'' என்றுள்ளதை ரஸிக வித்வான்கள் நினைவூட்டிய பின்பு உண்மையில் லஜ்ஜையே யுண்டாயிற்று. இந்த பிரதிவாதி நாம் நம்முடைய மதத்தை ரக்ஷிக்கப் பின்னடையமாட்டோ மென்றெழுதினர். அதற்கு நாம், தேரழுந்தூராண்டவன் ஸாதிக்கக் கேட்டிருந்த செவிலிமேட்டு மாந்தோப்புக் காவற்காரன் கதையை யெழுதி யிருந்தோம். அதுதான் மிகப்பொருத்தமான த்ருஷ்டாந்தமென்று பேசாதவர்களும் எழுதாதவர்களுமில்லை. நாமெழுதிய பல விஷயங்களுள் ''தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளையே தஞ்சமாகக் கொண்டவர்'' என்பதும், ''பிள்ளான் ஸ்ரீ ஸூக்தியில் ஒன்றையும் தழுவாததோடு அவருடைய ஸ்ரீ ஸூக்தியைக் கண்டித்துமிருப்பவர்'' என்பதுமே தலையான விஷயம். இதில் இவர் தம்மினத்தாரெல்லாரோடுங் கூடி வாதித்தாலும், வர்ஷசதம் வாதித்தாலும் பயன்பெற மாட்டாரென்பது திண்ணம். ரஹஸ்யத்ரயஸாரத்தில் அர்த்தமில்லாத வாக்யங்கள் பல; பரஸ்பர வ்யாஹதங்களான வாக்யங்கள் பல. இது ப்ரதிஜ்ஞாமாத்ரத்தோடு நிற்பதன்று. பலகால் பல நூல்களில் வடமொழி தென்மொழிகளில் *வாய்திறக்க வழியுண்டோ வென்று பலரும் பேசும்படி யெழுதியுள்ளேன். இவரும் இவரைச்சேர்ந்தவர்களும் நிந்தாபிச்சேஷபூரணம் பண்ணிக்கொண்டு கிடக்கலாமத்தனையன்றி வேறொன்றும் செய்யப்போகாது.

## அனைவரும் கவனிக்கவேணும்

இவரை நோக்கியும் இவரைச் சேர்ந்தவர்களை நோக்கியும் ஐம்பது வருடங்களுக்கு மேலாக நாம் நமது பத்ரிகைகளிலும் தனி நூல்களிலும் எழுதிவரும் விஷயங்கள் இரு வகுப்பானவை. (முதல்வகுப்பு.) இவர்களது கொள்கைகள் தேசிக திவ்யஸூக்திகளோடு சிறிதும் ஸம்பந்தப்படாதவை யென்பதாம். (இரண்டாம் வகுப்பு) ஒருகால விசேஷத்தில் (சென்ற நூற்றாண்டில்) கோவில் சண்டைகளைக் கிளப்பத் தொடங்கிப் பல கற்பனைகளைச் செய்துவைத்திருக்கிறார்களென்பது. இவ்விரண்டைப் பற்றியும் இப்போது நமது நிகமன வார்த்தைகள் கேளீர். [முதல் வகுப்புக்கு] "ஸ்ரீலோகாசார்ய ஸித்தாந்தஸாரம்" என்ற மகுடத்தின்கீழ் ஸ்ரீராமாநுஜனில் சென்றவிதழிலும் இவ்விதழிலும் தென்னாசார்ய ஸித்தாந்த ஸாரத்தை வெளியிட்டிருக்கிறோம். இதில் கிஞ்சித் சேஷமிருந்தாலும் அது விரைவில் (அடுத்த இதழில்) பூர்த்தியடையும். இது நமது வைதிகமநோஹராவில் ஸம்ஸ்க்ருதத்திலுமுள்ளது. இதேபோல் "ஸ்ரீமத்வேதாந்ததேசிக ஸித்தாந்த ஸாரம்" என மகுடமிட்டு இதே விஷயங்களில் தேசிகன் திருவுள்ளத்தை நிரூபிக்கட்டுமிவர்கள். (இரண்டாம் வகுப்புக்கு) இவர்களுடைய கற்பனைகளின் தத்துவத்தை (அல்லது) மருமத்தை நாம் கண்டுபிடிக்க முயன்றது எப்போதென்றால், ஸ்ரீவைஷ்ணவ வுலகமெல்லாம் கொண்டாட நின்ற ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியனை விட்டிட்டு ராமாநுஜதயாபாத்ர மென்கிற ஒரு சுலோகத்திற்கு — நீதிமன்றங்களிலெங்கும் நிராகரிக்கப்பட்ட சுலோகத்திற்கு — அவதாரஸ்தலத்திலும் விலைசெல்லகில்லாத சுலோகத்திற்கு — ஒருபவனத்தில் ஷட்சதாப்தியென்று கொண்டாடத் தொடங்கினார்களே, அப்போதுதான் தூப்புல் என்கிற சொல்லைப்பற்றியே முதன்முதலாக ஆராய்ந்தோம். காஞ்சீபுரத்தில் விளக்கொளி ஸன்னிதியில் தவிர தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் தேசிகன் எழுந்தருளியிருக்கிறார்; வேகவதிக்கரையில் ஸ்ரீரங்கராஜவீதி யென்கிற புதுத் தெருவிலும் நூதன நிர்மாணமாக தேசிகன் எழுந்தருளியிருக்கிறார். இவ்விடங்களிலும் பரிவட்டம் கட்டி மரியாதை செய்ய ப்ராப்தமாகும் ஸமயங்களில் அருளப்பாடு தூப்புல் வேதாந்த தேசிகனென்றே (இவர்கள்) கட்டியம் சொல்லக் கட்டளையிட்டிருக்கிறார்கள். இதை விவேகிகள் ஆராயலாமே. ஸ்ரீபெரும்பூதூரெம்பெருமானாரென்றோ, பூனமல்லி திருக்கச்சிநம்பிகள் என்றோ, காட்டுமன்னார் ஸன்னிதி நாதமுனிகள், ஆளவந்தார் என்றோ எங்கேனும் சொல்லுவாருண்டோ? எம்பெருமானார் காலத்தில் எங்களாழ்வானென்றும் நடாதூராழ்வானென்றும் சோகத்தூராழ்வானென்றும் வேறு சில ஆழ்வான்களும் ப்ரஸித்தர்களாக எழுந்தருளியிருந்தபடியாலே தத்வ்யாவ்ருத்திக்காகக் கூரத்தாழ்வானென்று வழங்கிவரலாயிற்று. தூப்புல் சொல்லால் வ்யாவர்த்திக்கப்படுவது எது? என்று கேட்டால் வாய்திறப்பாருண்டோ? தேசிகனுடைய திருவவதாரஸ்தலம் திருத்தண்கா என்பதாக ஸம்ப்ரதாய ஸித்தம். இதை தேசிகன் தீபப்ரகாச ஸ்துதியான சரணாகதி தீபிகையில் ஹிமோபவனமென்றும் சிசிரோபவனமென்றும் மொழிபெயர்த்துள்ளார். தூப்புல் என்றோ தூப்பல் என்றோ தூப்பில் என்றோ இருந்தால் அதை மொழி பெயர்க்காது விட்டிருக்கமாட்டார். அவருடைய நிர்விவாதமான தமிழ்ப் பாடல்களிலும்

இது இடம் பெற்றிருக்கவில்லை. அப்பய தீக்ஷிதர் அங்கு தும்பைவனமென்று அக்ர ஹார ப்ரதிஷ்டை செய்தபிறகு அதற்குக் கொச்சை நாமமாகத் துப்பில் என்று வழங்கத் தொடங்கினர்கள். க்ருஷ்ணமாசார்ய வேங்கடாசார்ய சேஷாசார்யாதிகளை கிச்சு, கிட்டு, வெங்கட்டு, சேச்சு, பாச்சு என வழங்குதல்போல.

புதுத் தெய்வங்கொண்டாடத் தொடங்கி நவீன கற்பனைகள் செய்யப் புகுந்த காலத்திலே விளக்கொளி ஸன்னிதி பரிஸரத்தை அங்குள்ளார்மட்டும் துப்பில் என வழங்கிவந்திருக்கக் கூடும். அதன் மருமமறியாமல் அதைப்பிடித்துக் கொண்டார்கள் நவீனர்கள். அப்போதே ஸயூத்யர்கள் பலர் ஆக்ரோசம் செய்ததாகவும், அதை விடமாட்டாத பிடிவாத மிகுதியினால் தேசிக விக்ரஹம் எந்த இடத்திலிருந்தாலும் தூப்புல் சொல்லைச் சேர்த்தே கட்டியம் சொல்லவேண்டியதென்று பிடிவாதக்கார வகுப்பினர் திட்டம் செய்ய அதுவே தொடர்ந்து வருவதாகவும் கீர்த்திமூர்த்தியான வித்வான் பகல் தீவட்டி. ராகவாசாரியர் ஸ்வாமி நாடுநகரமும் நன்கறியச் சொல்லிவந்தார்.

இந்தத் தூப்புல் விஷயத்தைச் சிலபலவாண்டுகட்கு முன்பு முதன் முதலாக அடியேனெழுதி வெளியிட்டபோது, இதற்கு மறுப்பெழுதத் தொடங்கின ஸ்ரீமான். அய்யாக்ருஷ்ணதாதாசாரியர் "பழநடை விளக்கத்தில் அண்ணுவப்பங்கார் தேசிகனைப் பற்றி யெழுதுகையில் 'தூப்புல்பிள்ளையை முனிந்தோம்' என்று ஸ்ரீரங்கநாதன் வெறுத்துரைத்ததாக எழுதியிருக்கையாலே தேசிகன் காலத்திலேயே ஸ்ரீரங்கத்திலும் தூப்புலென்கிற சொல் ப்ரஸித்திபெற்றிருந்ததை யறியலாம்" என்றெழுதினர். அப்போதே அன்றே நாமெழுதியது—இதனால் ரங்கநாதன் முனிந்த கதை ஸ்தாபிதமாகுமேயொழிய வேறென்றும் தேருது என்று. விளக்கொளி கோவில் விஷயமாகவும் அவ்விடத்து தேசிகன் ஸன்னிதி விஷயமாகவும் எண்ணிறந்த வியாஜ்ஜியங்கள் நடந்திருக்கின்றன. தூப்புலென்ற சொல் ஒன்றிலும் புகுந்திருப்பது கிடையாது. முனிசிபாலிடி யேடுகளொன்றிலும் ஏறியிருப்பதுமில்லை. திருத்தண்கா என்கிற விலக்ஷணமான சொல்லை எதற்காக இவர்கள் விட்டிட்டார்கள்? என்று கேட்டால் நான்முகனைப்போல் திசைதொறும் விழிக்கவேண்டியதுதவிர வேறில்லையென்று தெரிவித்து இந்த வம்புவிசாரத்தில் நின்றும் விரதராகிறோம்.

" விவக்ஷிதம் ஹி அநுக்தம் ஆகுலீகரோதிஹ்ருதயம் " என்பது காளிதாஸ கவியின் வாக்கு. இவர்களைப்பற்றி நமக்கு விவக்ஷிதங்கள் பலபல வுண்டு. "இவை பின்னும் வயிற்றுள" என்கிறார் ஆழ்வாரும். ஒன்று கேளீர். (அலங்கார சாஸ்த்ரத்தில்) சந்த்ராலோகத்தில் " ஸஹஸ்வ கதிசிந்மாஸாந்மீலயித்வா விலோசநே " என்றொரு லக்ஷ்யம் காட்டியிருப்பது ப்ரஸித்தம். ஒரு நாயகி நாயகவிச்லேஷ துக்கம் பொறுக்கமாட்டாமல் துடிதுடிக்கிறாள். அவளைநோக்கித் தோழி சொல்லும் வார்த்தையிது. ' நங்காய்! கண்ணை மூடிக்கொண்டு சில மாதங்கள் பொறுத்திரு ' என்பது இதன் பொருள். பல்லைக் கடித்துக்கொண்டு பொறுத்திரு, கண்ணை மூடிக் கொண்டு பொறுத்திரு, என்று சொல்லித் தேற்றுவது உலக வியற்கை. (ஸஹஸ்வ)

என்று சொல்லும்போது அந்த நாயகியின் நிலைமை எப்படிப்பட்டதா யிருந்தது? என்று கேட்டால் மிக்க பரிதாபங்கொண்ட நிலையிலிருந்தது என்றல்லது வேறொன் றும் சொல்லப்போகாது. இதனால் ஸஹ்யமான நிலையொன்றும் அஸஹ்யமான நிலை யொன்றும் தெரியவரும். பரிதாபத்தை வெளிக்காட்டாத நிலை முதலது; அதை அளவுகடந்து காட்டும் நிலை இரண்டாவது. இது சிரமப்பட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயமன்று. (நாயகவிரஹம் நாயகீ ந ஸஹதே) என்றால் நாயகி பிரி வாற்றாது துடிக்கிறாளென்பது அநாயாஸமாகத் தெரியவரும்.

ஆளவந்தார் எம்பெருமானுடைய குணவிசேஷத்தையும் *வாஸுதேவஸ் ஸர்வமென்றிருக்கிற மஹாத்மாக்களின் பெருமையையும் அநுபவிக்க விரும்பி ஸாதித்தருளின *ஸக்ருத் த்வதாகாரவிலோகநாசயா* என்கிற ச்லோக ரத்னத்தில் "யத்விரஹ: க்ஷணேபி தே அதிதுஸ்ஸஹ:, தைர் மஹாத்மபி: அவலோக்யதாம் மாம் நய" என்று அரஸிகர்களும் கண்ணநீர் பெருக்கும்படி கூறியிருக்க, "இங்கே (அதிதுஸ்ஸஹ:) என்பதனால் கேதம் விவக்ஷிதமன்று. அந்த மஹாத்மாக்களின் பிரிவை யுண்டாக்கமாட்டானென்றபடி' 'என்றெழுதி வைப்பவர்களைப்பற்றி என்ன சொல்லுவது! ஒருவன் பாம்புகடித்துத் துடியாநிற்க, 'இவன் துடிக்கிறானல்லன்; பாம்பு கடியாதபடி பார்த்துக்கொள்ளவேணுமென்கை" என்னுமாபோலே யன்றோ இவ்வுரையுள்ளது!

பிராட்டி புருஷகாரக்ருத்யம் செய்வதொன்றிலேயே ஊன்றினவளென்றும் புருஷார்த்தமளிப்பவன் பரமபுருஷனே யென்றும் பலவிடங்களில் வடமொழி தென் மொழி வாக்யசதங்களாலே நிலைநாட்டிவிட்டு, இடையிடையே சித்த விப்ரமங் கொண்டு ஒன்றோடொன்று இணங்காதபடி யெழுதிப் போருமிடத்தில் அலமேஷா பரித்ராதும் ராகவாத் ராக்ஷஸீகணம்...ராக்ஷஸ்யோமஹதோபயாத்" என்கிற பிரமாண வசனங்களை அடுக்கிக்கொண்டுபோகிற வொரு சுவடியை வைத்துக் கொண்டு காலக்ஷேபம் பண்ணிவருபவர்களை மஹாமேதாவிகளென்றும் மஹா ரஸிகர்களென்றும் மஹா ப்ராஜ்ஞர்களென்றுங் கொண்டு வழிபாடு செய்யுமவர் களை விலக்குவாராருமில்லை.

"பரமபதபங்க காலக்ஷேபம் ஆச்சரியமாக ஸாதித்தாகிறது; பரமபதமில்லை யென்பவர்களை சரமாரியாகக் கண்டித்தாகிறது" என்று வியக்கும் சிஷ்ய ஸம்ருத் திக்குப் பல்லாண்டு பாடுவோம். இவர்கள் எத்தனை புத்தகங்களில் பரமபதபங்க மென்று வெளியிட்டிருக்கிறார்களென்பதை, வி. பூதூரில் வாழும் உயர்திரு. வித்துவான் வெங்கடசாமி ரெட்டியார் எடுத்துரைத்துக் குலுங்கக் குலுங்க நகைத் ததை மறக்க முடியவில்லை.

இதையெல்லாம் வாசிக்கும்போது இவர்களுக்குக் கோபமும் தாபமும்மிக்கு *ஸம்தாபயதி ஸ்வம் தேஹம் ஆபாததலமஸ்தகம்* என்னும் நிலையேயாகும். இவர்களெழுதும் கொடிய கடிய வாக்கியங்களைக்கண்டு நாம் பரிதபிப்பதில்லை, விடையிறுத்து மகிழ்ந்து மகிழ்விக்கிறோமத்தனை.

இவ்வளவோடு முடித்து நிற்கிறோம்.

—:O:—

# UTPATTYASAMBHAVA–ADHIKARANA

( T. A. SAMPATHKUMARACHARYA, Vidwan, M.A., )

Dr. B. N. K. Sharma has discussed the Utpattyasambhavadhikarana of the Brahma-Sutras according to the three famous Bhashyakaras, Sri Sankara, Ramanuja and Madhwa and has tried to show that the last Bhashya alone is the most rational one. The facts of the case are these—

It is realised on all hands that the second quarter of the second chapter of the Brahmasutras is earmarked to the refutation of all schools of thought, antagonastic to the Vedanta, such as Sankhya, Yoga, Vaiseshika, Bauddha, Jaina etc., and the present Utpattyasambhavadhikarana is the last one of that quarter. Therefore it is in the fitness of things that it should also aim at refuting some "Avaidik" system. Sri Sankara interprets it as refuting the Pancharatra school. Many other Bhashyakaras have followed him. But, Sri Ramanuja interprets it as defending the same school. Sri Madhwa does not refer to the Pancharatra at all, but thinks that this Adhikarana condemns the Sakta system.

Now Dr. Sharmas's view is that both Sri Sankara and Ramanuja have gone out of the way thus—(i) the arguments advanced by Sri Sankara against the Pancharatra do not rest on proper foundation, and (ii) Sri Ramanuja's interpretation of the Sutras is belaboured and not convincing. He also sees no reason why the Sutrakara should be so solicitious of defending the Pancharatra doctrine of Vyuhas, unless he is committ d to doing so as part of his obligation to his philosophical creed. The opening sentence of Sri Sankara's Bhashya gives a fitting reply to this objection:— "Nanu srutipramanyenapi evamrupa eva Iswarah prak nirdharitah, prakritischa adhisthatha chethi. Tat kasya hetoresha pakshah prathyachikhyasitha ithi." This clearly states that the Pancharatra is on a very different footing than the other schools repudiated by the Sutrakara. Dr. Sharma swears that the objections raised agaist it by Sri Sankara do not rest on deep foundation. So it becomes quite clear that the Pancharatra is not antagonastic to the Brahmasutras. Then, is it out of the way that the Sutrakara should, while condemning hostile schools, specially make an exception of this one?

Dr. Sharma asks, "What was the necessity for the Sutrakara to go out of the way to defend the Pancharatra? Has he based his system upon these texts, too?" etc. Sri Ramanuja has shown at length that the Sutrakara has

extolled the Pancharatra in his other monumental work, the Mahabharata. So it is possible that some of his theories, like that of Brahman being both the Prakriti and Adhisthata, Brahman being identified with qualities like gnana, and sometimes spoken of as being endowed with these qualities etc., are the result of his study of the Pancharatra, along with the Vedas. So, it was necessary for him to defend the system which helped him to clearly understand the not-so-clear Vedic texts.

The argument about Pada-sangati has, on the face of it, some force and it can be safely surmised to be one of the causes of Sri Sankara's thinking that the Sutrakara was refuting some anti-vedic doctrines of the Pancharatra, though the main themes were unobjectionable. But there are instances where the Sutrakara introduces stray subjects amidst the main stream. A glaring example is found in the third quarter of the first chapter, in which, the three Adhikaranas (or only two according to Sri Madhwa,) Devata, Madhu and Apasudra, which have nothing to do with the subjects discussed in that quarter, are introduced. The Madhwabhasya-tippanikara says (1—3—26) "In this Adhikarana, the eligibility of the gods to Brahmavidya, is going to be established. It is not necessary to seek the Adhyaya and Pada-Sangati for this, as it is only prasangika, i.e., has cropped up by the way." Again in 1—3—34 he almost repeats the same words. Sri Ramanuja explaines clearly that the Utpattyasambhavadhikarana is prasangika i. e., when other systems are being discussed and refuted, the reader naturally thinks of the Pancharatra and desires to know what its fate is. So, by-the-by the Sutrakara devotes a section to discuss it. In other words, it was necessary that, while refuting all the other schools, the Sutrakara should add a word of caution to his reader, that the Pancharatra was an exception. Then, why make so much fuss about it?

Dr. Sharma objects to the interpretation of tadapratishedha as pramanya-apratishedha, saying that, "strict rules of sutra-interpretation by anuvritti or other devices would militate against an adhyahara." He has overlooked the simple fact that the word TAD really refers to the Pancharatra sastra, which has to be referred to in the first Sutra. So, tad-apratishedha really means pancharatra-sastra-apratishedha, which tantamounts to saying pancharatra-sastra-pramanya-apratishedha. Thus the argument about adhyahara fails, miserably.

The argument about Sri Ramanuja's interpretation of the word vijnanadibhave is also untenable. In the first place, it should be clearly noted that Sri Ramanuja could have easily accepted Sri Sankara's interpretation "[illegible]

"Iswaraa evaithe sarve gnanaiswarya - sakthi - bala-virya-tejobhiraiswara-dharmairanvithah" which is not altogether different from that of his (Sri Ramanuja's) own. So, we should try to find out the cause of his adopting a different and difficult construction. Surely, it could not be purposeless. The famous Srutaprakasika comes to our help here by saying, "Bhagavan Vasudeva is both jnana-swarupi and the root, material cause of the world. Therefore the word Vijnanadi (when interpreted as being made up of vijnana and aadi) connotes Vasudeva. By constructing this word so as to mean the possessor of gnana etc., the fact, that Sankarshana and others are really Vasudeva can only be implied. Instead of it, it is better to adopt a construction which actually connotes this fact. The Vedantas also describe Brahman both as being the primary cause and gnanaswarupi. Thus, this particular interpretation also proves that the Pancharatra is in accordance with the Vedanta." These words quell, INTER ALIA the objection that the word ADI in vignanadi is purposeless.

The word VA in this sutra means, according to Sri Sankara, 'Evamapi', which is a bit unnatural, though not impossible. Sri Madhwa attaches no significance to it, at all; but his Tippanikara says, "The word VA in the Sutra is to hint that a different school is being mentioned here". But then the question arises as to why the Sutrakara did not use it, or a similar term, in the previous sutra, which is also considered to refute a different school than that mentioned in the first sutra. In other words, if the first three sutras deal with different schools (of Saktas) and if the Sutrakara uses a VA in the third sutra, to suggest that a different school is made mention of there, then why did he not use a similar word in the second sutra also ? Some might be tempted to say that the word CHA serves this purpose. But, alas! the Tippanikara has a different tale to tell—"Anena sautrah cha-sabdah yatha ithyarthe avadharane chethyabhipraithi". i.e., the word cha means yathah and eva (but not va). Therefore it is natural to conclude that the third Sutra alone speaks of a different school than that of the previous two sutras. This is precisely what Sri Ramanuja says. Thus it is clear that the word VA finds its most natural meaning and full significance, only according to the Sri Bhashya.

To the objection that in this sutra both Sankara and Ramanuja are obliged to go in for the adhyahara of the subject, "Sankarshanadinam (api vijnanadibhave)" we reply with an emphatic 'no'. Let the objector understand that Sankarshanadinam means Karthuh karanasya cha, which are actually mentioned in the previous sutra.

There is not much force in the argument that according to the interpretation of Sri Sankara and Ramanuja, the Sutrakara could have easily omitted

the second sutra, as its meaning could be easily included in the first one, itself. That is, the first sutra itself can be interpreted as, "Because it is impossible that the soul and out of it, the mind, should be born" thus rendering the second sutra unnecessary. But the story does not end there, because the objections raised in the two sutras are different and so, cannot be easily compressed into one sutra—(i) the soul is not born and (ii) the mind is not born out of the soul. The first objection is against the birth of the soul itself and not against its cause. The second objection is not against the birth of the mind, as such, because even according to the Vedantin, it is really born; but it is against its cause—Brahman or the soul. This difference cannot be brought out clearly, if the two are compressed into one sutra.

Now, let us examine whether the Madhwa Bhasya is really free from all defects. The Tippanikara introduces the Bhashya of this Adhikarana with the following words:— "Of course, the Sakthi-paksha stands refuted by the asamanjasya explained in the previous adhikarana. Still, it is now going to be refuted again, by pointing out some more faults, which are peculiar to it." This means that the Saktivada already stands refuted by the nyaya discussed in the previous Adhikarana itself. From this it follows that it is not very necessary to open another Adhikarana for beating the snake, which is already beaten to death. It is an accepted principle of the Mimamsa. that a topic should not be discussed again, if it follows from a Nyaya already discussed and established. The Bhashya on the third Sutra is not clear, because the meaning of "Tadaprathishedhah" has not been brought out clearly. The Bhashya explains it by the word "Isavada-antharbhavah". The Tippanikara explains:—"Tadaprathishedhah-tena Saktheyena, thasya-Pasupatha-mathasya, aprathishedhah krthas syath. Tachcha nirasthamevethi punas-thad-aprathishedhah nasmabhih tatprathishedhah kaaryah ithyanuvritthyaa tadaprathishedha ithyamso vyakkhyaathah." The purport of these sentences is this—If Siva is endowed with all qualities, body and organs, then it amounts to the Sakta's accepting the Pasupatavada, which has been already refuted in the previous Adhikarana, making it unnecessary to refute it once again. To get at this meaning, the word "tadaprathishedhah" has to be repeated again. May we ask Dr. Sharma whether this repetition of a part of the Sutra and the wonderful meanings derived from it, are all in accordance with strict rules of interpretation? In the first instance, can the word "tadaprathishedhah" naturally or effortlessly mean, "Saktheyena Pasupathamathasya aprathishedhah krthah syath?" Where did the word Saktheyena come from? Is it not a vety far-fetched Adhyahara? Next, in the second instance, how can the

repeated word "tadaprathishedhah" mean, "It is not necessary to refute it again?" Dr. Sharma gives an easy paraphrase of this sutra-bhashya, without taking the trouble of actually deriving it from the sutra.

Again, we cannot appreciate the argument that if Siva is endowed with all powers of knowledge, body, organs etc., he can afford to dispense with Sakti. If, being a female principle, Sakti cannot become the creater without indispensible assistance and favour from a male principle, then is it not pertinent to ask that similarly the male principle cannot also create without the assistance of the female principle? Is creation of the world equal to begetting of children, to require two principles—male and female? We cannot understand why this objection has been over-looked by Sri Madhva. All said, it is clear that the Madhwa-bhashya is not as satisfactory as Dr. Sharma would wish us to think.

Dr. Sharma says that despite his lengthy gloss on this Adhikarana, Sri Ramanuja did not take the trouble of refuting all the charges levelled against the Pancharatra by its opponents and that only Sri Madhwa and his followers took up this task upon themselves. Perhaps Dr. Sharma has not heard of the great Sri Yamunacharya, the parama-guru of Sri Ramanuja and his classical work, "Agama-pramanya," which deals with the pros and cons of the Pancharatra system at great length, explaining, inter alia, this adhikarana also. The famous Sruthaprakasika also refutes each and every one of the objections raised by Sri Sankara. Again, a later Acharya, Sri Vedanthacharya has written the "Pancharathra-Raksha" to defend this system. Thus, we wish to bring to the notice of Dr. Sharma that Sri Vaishnava Acharyas have actually done much in support of the Pancharathra.

Now we shall try to find out, independently, why the three Bhashyakaras explained this Adhikarana so divergently. Sri Ramanuja's case is simple. Being a follower of the Pancharatra, he found it necessary to defend it, as his predecessor had condemned it. We have already shown that his interpretation is flawless. But then, why did the Sutrakara defend it? Because, during his time, the rival schools, some out of spite, some out of ignorance and some out of misconception, were criticising the Pancharatra, saying that it was against the Vedanta. The Sutrakara, as explained earlier, was in favour of the Pancharatra and so thought it necessary to defend it. But then, why did Sri Śankara criticise it? To answer this question, we must first try to find out if Sri Sankara really meant to criticise it at all. Dr. Sharma himself quotes

Dr. Karmarkar as saying, "It seems that Sankara who wanted to discredit the Pancharatra system, first explained the section as refuting the system. The hurried manner in which he explains this section, the very weak arguments..... ...that are brought by him and the many doctrines held by the Bhagavathas which Sankara is forced to admit as not being taken up for discussion, all this clearly shows that Sankara was not quite at ease in his explanation of this Adhikarana." These remarks do not, however, answer the question, "Why should Sri Sankara want to discredit the Pancharatra at all, if he was not really at ease with his own explanation of the sutras?" Among the systems discussed in this quarter of the Brahmasutras, the Sankhya, Yoga and Vaiseshika systems have little or no followers. The Bauddha and Jaina are clearly atheists and anti-vedik. So, there is no harm in criticising these systems. But the Pasupata, Sakta and Pancharatra systems have a large number of followers. They are all thiests and claim to acknowledge the authority of the Vedas. So, Sri Sankara might have been influenced by the saying "Na buddhibhedam janayeth" (Gita) and thought it undesirable to praise any one of these at the expense of the others. In other words, he wanted to give them all, more or less the same kind of treatment. So he tried to criticise the Pancharatra also, by saying that there were certain anti-vedanta elements it it, which have to be safely dropped. Even Sri Ramanuja reconciles the Sankhya, Yoga and Pasupata with the Vedas and Pancharatra, by saying that the former ones need not be rejected out-right, but should be adopted with some modifications or corrections. But it is difficult to say why Sri Sankara did not make mention of the Saktas, along with Maheswaras in the previous Adhikarana. Sri Ramanuja can easily say that the Saktas are refuted by the Nyaya established in the previous Adhikarana.

After Sri Ramanuja, the Pancharatra gained its glory and Sri Madhwa felt no further necessity to vindicate it. He took its validity as axiomatic. See his Bhashya on 1–2–15. The pada-sangati tempted him to refute some system or other, in this Adhikarana and so he directed it towards the Sakta cult, noticing that both his predecessors did not make specific mention of it and feeling that it was an unhappy omission.

Dr. Sharma says that "Madhwa has made one notable convert to his views among the ancient commentators and that is Nimbarka." This means that he is the only convert. Sri Vallabha, who is also a staunch Vaishnava, has chosen to follow Sri Sankara in this matter. He says, "Viprathishedhaccha-Bahukalpanayaa veda-nindayaa cha virprathishedhah. Chakaraath vedapra—kriyaavirodhah." His commentator explains the second sentence thus—Taptha-

chakradi–dharana–rupa–sadhana–prakara virodhah. This statement throws a new light on the whole subject. It explains why such staunch Vaishnavas as Sri Sankara and Sri Vallabha are not quite happy with the Pancharatra, although they fully endorse and accept the god-head and mode of worship ordained in it. For some reason or other, they do not approve Taptha–mudra–dharana and so criticise that system (Pancharatra), somehow or other. Sri Ramanuja and Sri Madhwa approve this act and have, therefore, no complaint to make against this system.

Another Bhasyakara, Nilakantha, also complains about Taptha–mudra–dharana prescribed by the Pancharatra. But, none of the Bhasyakaras (except Sri Ramanuja) has explained the true meaning of this last Sutra. The last Sutra of the first Adhikarana of this quarter runs, "Viprathishedhaccha asamanjasam," which means that the Sankhya system (under review in that Adhikarana) is not sound because of viprathishedha (or contradiction). In the present Adhikarana, the Sutrakara simply says "Viprathishedhaccha," and avoids the word "asamanjasam". This clearly shows that in this case no asamanjasya (in the system under review) was envisaged by the Sutrakara. Only Sri Ramanuja has taken note of this fact and has consequently explained that the contradiction referred to by the Sutra is not internal or mutual contradiction, but of the birth of the soul as such, referred to in the first Sutra. The other Bhashyakaras fail to note this point and try to explain this Sutra as meaning, "The Pancharatra Sasthra (or Sakti-cult) postulates some doctrines which are contradictory to its own sayings, or those of the Vedas. But the wording of the Sutra (deleting the word "asamanjasam" from it) clear shows that only Sri Ramanuja's interpretation is the correct one.

So, the whole question boils down to the acceptance or rejection of Tapthamudradharana. Everything else is subsidiary. Sri Ramanuja and according to him, the Sutrakara, thought it necessary to extole the Pancharatra, because many voices were being raised against it. But Sri Madhwa thought that its authority was beyond question. Nevertheless, the Utpattyasambhavadhikarana had to be commented upon; so he directed it against the Saktivada.



# திவ்ய ஞான நிதி

பெரிய அதிகாரத்திலிருந்து ஓய்வுபெற்று அம்பத்தூரில் வாழ்ந்துவருபவரான ஸ்ரீமான் உ. வே. அகரம் சடகோபாசாரியர் ஸ்வாமி, தமது குமாரர் முதலிய பல ஆஸ்திகர்களின் உதவியைக்கொண்டு பலவாயிரம் ரூபாய் திரட்டி ஒரு நிதியை ஸதாபித்திருக்கிறார். இதன் உத்தேசமென்னவென்றால் காலத்தின் கொடுமையால் மங்கிக் கிடக்கும் நமது அறநூல்களை சிறுவர் பயில வழி செய்வதேயாகும். அதாவது பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் படித்துவரும் நமது மாணவர்களில் சிறந்தவர்களுக்கு உபயுக்தமான வேதம், திவ்யப்ரபந்தம், ஸ்தோத்ரம், வேதாந்தம் போன்றவைகளை அவரவர்கள் விருப்பத்திற்கும் ஸௌகர்யத்திற்கும் தக்கபடி கற்பிப்பது. காஞ்சீபுரம், திருவல்லிக்கேணி, அம்பத்தூர் முதலிய இடங்களில் இவ்வாறு திவ்ய ப்ரபந்தம், ஸ்தோத்ரம், வேதாந்தம் ஆகிய வகுப்புக்கள் தற்சமயம் நடத்தப்பட்டு வருகின்றன. மேற்படி வகுப்புக்களை நடத்தும் ஆசிரியர்களுக்கும் கற்கும் மாணவர்களுக்கும் தகுந்த ஸன்மானம் அளிக்கப்பட்டு வருகிறது. இதுவுமல்லாமல், ஆழ்வார் திருநகரி, மேற்கு மாம்பலம், மதராஸ் கீதாமந்திரம் முதலிய இடங்களில் நடைபெறும் வகுப்புக்களுக்கும் பணஉதவி செய்யப்படுகிறது.

இவ்விடங்கள் மட்டுமேயல்ல, எந்த ஊரில் எந்த இடத்திலாவது மேற்படி திவ்யக்ரந்தங்களைப் பல மாணவர்கள் சேர்ந்து தங்கள் ஸௌகரியப்படி பயில விரும்பினாலும் அதற்கு வேண்டிய வசதிகளை இயன்றவரை செய்துகொடுக்க விருப்பமுண்டு. இவ்வகுப்புக்களில் அன்வயிக்கும் ஏழை மாணவர்களுக்குத் தகுந்த பண உதவியும் செய்யப்படும்.

இந்த திட்டத்தின் மூலம், நமது வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் நடைபெற்ற வைகாசி, ஆனி மாதங்களில் வேதங்கள், வேதாங்கங்கள், வேதாந்தம், ஸ்ம்ருதிதிஹாஸ புராணங்கள், திவ்வியப் பிரபந்தம், ஸ்தோத்ர ரஹஸ்யங்கள் முதலிய பவித்ர க்ரந்தங்களுடையவும் அவற்றை எழுதிய ரிஷிகள், ஆழ்வார்கள் மற்றும் ஆசாரியர்களுடையவும் பெருமை விஷயமாக 40 உபந்யாஸங்கள் நிகழ்த்தப் பெற்றன. பல சிறுவர்கள் கேட்டுப் பயன் பெற்றனர்,

லௌகிகப் பள்ளிகளில் படித்துவரும் நமது மாணவர்களுக்கு தற்காலத்தின் சூழ்நிலையில், வைதிக வித்யையையும் சிறிதளவாவது கற்றுக்கொள்ள வாய்ப்பே கிடைக்காதாகையால், அன்னார்கள் நமது தர்மம் என்றால் என்ன என்பதையே உணரப்பெறாமல் அதில் ச்ரத்தையுமின்றி நாஸ்திகர் போலவே இருந்துவிடுகிறார்கள். இந்தநிலை இப்படியே நீடித்தால் தர்மமே யழிந்துபோகும் நிலைமையன்றோ ஏற்பட்டு விடும். இதைத் தடுக்கவேண்டியது ஒவ்வொரு ஆஸ்திகனுடைய புனிதமான கடமையாகும். மாணவர்கட்குத் தரும் உணர்ச்சியூட்டுவதே இதற்குத் தகுந்த வழியாகும். இத்தொண்டு இந்நிதியால் ஓரளவுக்கு செயற்படுவதையறிந்து மகிழ்கிறோம்.

ஆதலால் தர்மச்ரத்தையுடைய மாணவர்களனைவரும் இந்தத் திட்டத்தில் தங்களாலியன்றவரை பங்குகொண்டு நன்மை யடைவார்களாக. முழு விவரங்களுக்கு அடியிற்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

DIVINE SCIENCE TRUST, 26, K. K. Road, Ambattur, MADRAS-53.

# ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவ ப்ரகடனம்.

ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யராய் உபய வேதாந்த ப்ரவசந துரந்தரராய் நியாய வேதாந்த வித்வந்மணியா யெழுந்தருளியிருக்கும் திருநாங்கூர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிக்கு நிகழும் பரீதாவி வருஷம் ஆவணிமீ 10௳ பூரட்டாதி நக்ஷத்ரம் சனிக்கிழமை கூடின சுபதினத்தில் ஷஷ்டி யப்தபூர்த்தி மஹோத்ஸவம் ப்ராப்தமாகிறது. இது அவருடைய ஜன்மபூமியான திருநாங்கூரில் வைகுந்த விண்ணகரம் ஸன்னிதிக்கருகிலுள்ள அவரது திருமாளிகை யில் (26—8—72) நடைபெறுகின்றது. முன்னடி 22—8—72 செவ்வாய்க்கிழமை தொடங்கி அருளிச்செயல் ஸேவையும் வேதவேதாங்க பாராயணங்களும் வித்வான் களின் உபந்யாஸங்களும் விசேஷ வைபவமாக நடைபெறும். திருமாளிகைசிஷ்யர் களும் மற்றுமுள்ள அன்பர்களும் கூடியிருந்து குதுகலித்து அநுபவிக்கவேணும்.

# ஸ்ரீ பாஞ்சராத்ர ப்ரதிஷ்டா விதி.

பகவத் சாஸ்த்ரமான ஸ்ரீ பாஞ்சராத்ர ஆகமங்களில், மூலஸம்ஹிதைகளான ஸாத்வத, பௌஷ்கர. ஜயாக்ய ஸம்ஹிதைகள், ரத்ன த்ரயங்கள். இவைகளில் ஸாத்வதத்தின் நுண்பொருள்களை ஈசுவர ஸம்ஹிதையும், பௌஷ்கரத்தின் பொருள் களை பாரமேச்வர ஸம்ஹிதையும், ஜயாக்யத்தின் பொருள்களை பாத்ம ஸம்ஹிதை யும் ஸவிஸ்தாரமாகக் கூறுகிறது. முறையே, ஸாத்வத ஈச்வர ஸம்ஹிதைகள் திரு நாராயணபுரத்திலும், பௌஷ்கர பாரமேச்வர ஸம்ஹிதைகள், திருவரங்கம் பெரிய கோயிலிலும், ஜயாக்யபாத்ம ஸம்ஹிதைகள் பெருமாள்கோவிலான அத்திகிரி அருளாளன் ஸந்நிதி காஞ்சீபுரத்திலும் அனுஷ்டிக்கப்படுகிறது. "ரத்நேஷு த்ரிஷு வபி ச்ரேஷ்டம் ஜயாக்யம் தந்த்ரமுச்யதே" என்றபடி, இம் மும்மணிகளிலும், ஜயாக்யமும் அதன் வியாக்யான ஸம்ஹிதையான பாத்மமும் தலைசிறந்தது. ஏனெனில் பகவத்ப்ரோக்தத்திலும் சரி. இன்றைய உலகில் ஆஸேது ஹிமாசலாந் தம், கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தம், ஸ்ரீபாத்மஸம்ஹிதா விதிப்படிதான் நடைபெற்று வருவது ப்ரத்யக்ஷ அனுபவஸித்தம். அடியேன் ஸ்ரீபாத்ம ஸம்ஹிதையை இன்றைய உலகியலுக்கேற்பத் தமிழ்ப்படுத்தி எழுதி உள்ளேன். இது ஏனைய, பெரிய சிறிய அர்ச்சக ஸஹோதரர்களுக்கும், மற்றும் ஆஸ்திக சிகாமணிகளுக்கும், தேவஸ்தா னம் லைப்ரெரிகளுக்கும் மஹோபகாரமானபடியால் எல்லோரும், "ஸ்ரீ பாஞ்சராத்ர ப்ரதிஷ்டா விதி" என்பதான இத்தமிழ்நூலை வாங்கி ஆதரிக்கவேணுமாய் பிரார்த் திக்கிறேன். இதன் விலை தபால் உள்பட ரூ. **5—00.**

கிடைக்குமிடம் :—


**அ. வை. பெரிய திருவடி பட்டர்,**

தெற்கு மாடவீதி, ஸ்ரீவைகுண்டம்,

திருநெல்வேலி ஜில்லா. (தமிழ் நாடு)